உ

கடவுள் துணை.

மண்டலபுருடோத்தமன்

அருளிச்செய்த

# சூடாமணிநிகண்டில்

பதினோராவதாகிய

## ஒருசொற்பல்பொருட்டொகுதி

மூலமும் உரையும்,

௩-ம் பதிப்பு

புதுவை

சு. மாணிக்க உபாத்தியாயர் அவர்களால்

பலபிரதிருபங்களைக்கொண்டு

பரிசோதிக்கப்பட்டு,



ஸ்ரீ - புஷ்பரதசெட்டி அண்டு கம்பெனியால்

தமது

கலாரத்நாகரம் என்னும்

அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது.

சென்னபட்டணம்.

1894.

உ

கடவுள் துணை.

# பதினோராவதுநிகண்டு

என்கிற

# ஒருசொற்பலபொருட்டொகுதி.

## காப்பு.

முடிவிலின் பத்து மூவா முதல்வனைப் போற்றி செய்தே
யடிதொறு மிரண்டு மொன்று மாதியிற் பொருளடக்கி
நடைபெறு ககர மாதி னகரவீ றெதுகை யாகப்
படியிலோர் சொற்பொ ருட்பல் விதத்தொகை பகர லுற்றும்.

## பதப்பொருள்.

| | |
|---|---|
| முடிவில் | அளவில்லாத |
| இன்பத்து | இன்பத்தையுடைய |
| மூவா | கெடாத |
| முதல்வனை | அருகக்கடவுளை |
| போற்றிசெய்து | துதிசெய்து |
| அடிதொறும் | அடிகடோறும் |
| இரண்டும் | இரண்டுசொல்லினும் |
| ஒன்றும் | ஒருசொல்லினும் |
| ஆதியில் | முதலில் |
| பொருள் | பொருள்களை |
| அடக்கி | அமைத்து |
| நடைபெறு | நடைபெற்றுவரும் |
| ககரமாதி னகரவீறெதுகையாக | ககரவெதுகைமுதல் னகரவெதுகை யிறுதியாக |
| படியில் | இவ்வுலகின்கண் |
| ஓர் சொற்பொருட் பல் விதத்தொகை | ஒருசொற் பலவகைப் பொருட்டொகுதியை |
| பகரலுற்றும் | சொல்லலுற்றும், என்றவாறு. |

---

## க-வது ககரவெதுகை.

| விருத்தம். | | இதன்பொருள். |
|---|---|---|
| 1—க. | | க. |
| பகவனேயீசன்மாயோன் பங்கயன்சினனேபுத்தன், | பகவன் | சிவன் - திருமால் - பிரமன் - அருகன் - புத்தன் (ரு) |
| பகலேநாளொருமுகூர்த்தம் பகலவனடுவேதேசு, | பகல் | நாள் - ஒரு முகூர்த்தகாலம் - சூரியன் - நடு - பிரகாசம் (ரு) |

| | | |
|---|---|---|
| மகரமேசுறுப்பூந்தாதாம் | மகரம் | சுறு - பூந்தாது (உ) |
| வசிகூர்மைவசியம்வாளே, | வசி | கூர்மை - கைவசம் - வாள் (௩) |
| அகமனமனையேபாவ மகலிடமுள்ளுமாமே. | அகம் | மனம் - வீடு - பாவம் - இடம் - உள் (௫) |
| 2—உ. | | உ. |
| சிகரிகோபுரமேவெற்புச் சீறெலிநாரைநாற்பேர், | சிகரி | கோபுரம் - மலை - எலி - நாரை (௪) |
| சிகழிகைமயிர்முடிப்பேர் சிறந்தவாசிகைதேமாலை, | சிகழிகை | மயிர்முடி - சோத்தமாலை - பூமாலை (௩) |
| சிகரமேமலையினுச்சி திரைசென்னிதிவலைவெற்பாம், | சிகரம் | மலையினுச்சி - அலை - தலை - துளி - மலை (௫) |
| மகம்யாகமோர்நாளென்ப | மகம் | யாகம் - ஓர்நட்சத்திரம் (உ) |
| மாய்வென்பமறைவுஞ்சாவும். | மாய்வு | மறைவு - சாவு (உ) |
| 3—௩. | | ௩. |
| இகல்பகைவலிபோர்முப்பேர் | இகல் | பகை - வலிமை - யுத்தம் (௩) |
| இகுளையேதோழிநட்பாம், | இகுளை | தோழி - சிநேகம் (உ) |
| புகரென்ப மழைக்கோள்குற்றம் புற்கெனு நிறமுமுப்பேர், | புகர் | சுக்கிரன்-குற்றம்-கபிலநிறம் (௩) |
| நகமலையுகிர்மரப்பேர் | நகம் | மலை - நகம் - மரம் (௩) |
| நகைமகிழ்வொளிசிரிப்பாம், | நகை | மகிழ்ச்சி - பிரகாசம் - சிரிப்பு (௩) |
| ககனம்விண்படைகாடென்ப | ககனம் | ஆகாயம் - சேனை - காடு (௩) |
| கடவுடேமுனிநன்மைப்பேர். | கடவுள் | தெய்வம் - முனிவன் - நன்மை (௩) |
| 4—௪. | | ௪. |
| சாகஞ்சாகினிவெள்ளாடு தேக்கெனுந்தருவேதேனீ, | சாகம் | சிறுகீரை - வெள்ளாடு-தேக்கமரம் - தேனீ (௪) |
| பாகலேகாரவல்லி பலாவென்றும்பகரலாமே, | பாகல் | பாகல் - பலாமரம் (உ) |
| யூகமேகருங்குரங்கோ டுட்பொருளுணர்தருக்கம், | யூகம் | கருங்குரங்கு - அகப்பொருளறிதல் - தருக்கம் (௩) |
| நாகம்விண்குரங்குபுன்னை நற்றுகிலமலைபாம்பியானை. | நாகம் | ஆகாயம் - குரங்கு - புன்னைமரம் - நல்லாடை - மலை - பாம்பு - யானை (எ) |
| 5—௫. | | ௫. |
| திகிரியேமூங்கில்வட்டந் தேருருளாழிவெற்பாம், | திகிரி | மூங்கில்-வட்டவடிவு-தேர்-தேருருளை-சக்கராயுதம்-மலை (௬) |
| சிகியென்பமஞ்ஞைதீயாந் தீதுறுகேதுவும்பேர், | சிகி | மயில் - நெருப்பு - கேதுவெனுமோர்கோள் (௩) |
| ஞெகிழியேசிலம்பினும நெருப்புறுகொள்ளிக்கும்பேர், | ஞெகிழி | சிலம்பு - நெருப்புறுவிறகு (உ) |
| எகினமேபுளிமாநாளி கவரிமாநீர்நாயன்னம். | எகினம் | புளிமாமரம் - நாய் - கவரிமான்-நீர்நாய்-அன்னப்புள் (௫) |
| 6—௬. | | ௬. |
| ஆகுவேயெலியினும மாம்பெருச்சாளிக்கும்பேர், | ஆகு | எலி - பெருச்சாளி (உ) |
| யோகமேதியானங்கூட்ட முபாயமாமுயர்ச்சிக்கும்பேர், | யோகம் | தியானம் - கூட்டம் - உபாயம் - உயர்ச்சி (௪) |

| | | |
|---|---|---|
| போகியிந்திரன்பாம்பென்ப | போகி | தேவேந்திரன் - பாம்பு (௨) |
| போகில்புட்பொதுப்பூ மொட்டா | போகில் | பறவைப்பொது - பூவரும்பு (௨) |
| கோகிலங்குயில்பல்லிப்போர் [ம், | கோகிலம் | குயில் - பல்லி (௨) |
| குடங்கரேகுடிசைகும்பம். | குடங்கர் | குடிசை - குடம் (௨) |
| 7—எ. | | எ. |
| பொகுட்டுத்தாமரைப்பூங் கொட்டை பொருப்புச்சேற் றெழுந் தகொட்புள், | பொகுட்டு | தாமரைச்சொட்டை - மலை - சேற்றிலெழுங்குமிழி (௩) |
| இகுத்தலேசெகுத்தல்வீழ்த்த லிரித்தலோடழைத்தலீதல், | இகுத்தல் | கொல்லுதல் - தள்ளுதல் - சாய்த்தல் - அழைத்தல் - கொடுத்தல் (௫) |
| புகைக்கிடுநாமந்தூமம் போற்றும்யோசனைக்கும்பேரே | புகை | புகை - யோசனைதூரம் (௨) |
| அகைத்தல்வேதனையொடித்த லறுத்திடலுயர்த்தலாமே. | அகைத்தல் | வருத்தம் - முறித்தல் - அறுத்தல் - உயர்த்தல் (௪) |
| 8—அ. | | அ. |
| சிக்கமேகுடுமிநாமஞ் சீப்புடனுறியுமேற்கும், | சிக்கம் | குடுமி - சீப்பு - உறி (௩) |
| கொக்குமாமரமேசெந்நாய் குரண்டமேமூலநாளாம், | கொக்கு | மாமரம் - செந்நாய் - கொக்கு - மூலநட்சத்திரம் (௪) |
| வக்கிரங்கொடுமைமீளன் மடங்குதலுடனேவட்டம், | வக்கிரம் | கொடுமை - மீளுதல் - மடங்குதல் - வட்டம் (௪) |
| சக்கிரிகுயவன்செக்கா னராபதிநெடுமால்பாம்பு. | சக்கிரி | குசவன் - செக்கான் - அரசன் - திருமால் - பாம்பு (௫) |
| 9—கூ. | | கூ. |
| தூக்கென்பபாட்டுங்கூத்துந் துலாமுமாராய்தலும்பேர், | தூக்கு | செய்யுள் - கூத்து - நூறுபலம் - ஆராய்தல் (௪) |
| பாக்கென்பதெதிர்காலத்தைப் பகரிடைச்சொற்றுவர்க்காய், | பாக்கு | எதிர்கால விடைச்சொல் - பாக்கு (௨) |
| மேக்குமேற்றிசைமேலும்பேர் | மேக்கு | மேற்றிசை - மேல் (௨) |
| மெய்யுண்மையுடலுமாமே, | மெய் | நிசம் - சரீரம் (௨) |
| ஊக்கமேவலியுற்சாக முள்ளத்தின் மிகுதிக்கும்பேர். | ஊக்கம் | வலிமை - உற்சாகம் - உள்ளக் கிளர்ச்சி (௩) |
| 10—க0. | | க0. |
| பகடிபம்பெருமையேறு பஃறியாண்மேதியைம்பேர், | பகடு | யானை - பெருமை - எருது - ஓடம் - எருமைக்கடா (௫) |
| தகடிலையம்மையென்ப | தகடு | இலை - அச்சவடிவு (௨) |
| தபனனேயிரவிதீயாம், | தபனன் | சூரியன் - நெருப்பு (௨) |
| அகடென்பநடுவேகுக்கி | அகடு | நடு - வயிறு (௨) |
| அருளென்பகருணைசத்தி, | அருள் | கிருபை - சிவசத்தி (௨) |
| மகரந்தங்கள்ளுந்தேனு மலர்த்தாதும்வழங்கும்பேர். | மகரந்தம் | கள் - தேன் - பூந்தாது (௩) |
| 11—கக. | | கக. |
| சகுந்தம்புட்பொதுநீள்பூசஞ் | சகுந்தம் | பறவைப்பொது - கழுகு (௨) |
| சடையென்பவேணிவேராம், | சடை | சடை - வேர் (௨) |

| | | |
|---|---|---|
| சிகண்டியேபாலையாழின் | சிகண்டி | பாலையாழின்திறத்தோரிசை- |
| திறத்திசைமயிலலிப்பேர், [ன் | | மயில் - பேடி (௩) |
| சகுனிபுள் ணிமித்தம்பார்ப்போ | சகுனி | பறவை-சகுனம்பார்ப்பவன் (௨) |
| சமமெனபதமரோப்பாகும், | சமம் | யுத்தம் - உவமை (௨) |
| சகுனமேகிழங்குப்புள்ளின் | சகுனம் | கிழங்கு - பறவைச்சாதி - |
| சாதியுநிமித்தமும்பேர். | | சகுனம் (௩) |
| 12—கஉ. | | கஉ. |
| சக்கரம்பெருமையோர்புட் | சக்கரம் | பெருமை - ஓர்பறவை - பூமி - |
| டரணியேபிறப்புவட்ட, | | பிறப்பு - வட்டவடிவு - தே |
| மிக்கதேருருளேயாழி | | ருருளை - கடல் - மலை (அ) |
| வரைபெனவிளம்புமெண்பேர், | | |
| பக்கம்புட்சிறகுநட்புப் | பக்கம் | பறவையினிறகு - சிநேகம் - பிர |
| பகர்திதியருகுமாகும். | | தமை முதலிய திதி-பக்கம்(௪) |
| நக்கனேயருகன்சம்பு | நக்கன் | அருகன் - சிவன் - திகம்பரன் (௩) |
| திருவாணிநாட்டுமுப்பேர். | | |
| 13—கா. | | கா. |
| பூகமேதிரள்பூகம் | பூகம் | திரண்டவடிவு - கமுகமரம் (௨) |
| புன்கணென்பதுநோய்துன்பம், | புன்கண் | வியாதி - துன்பம் (௨) |
| வாகுவேயழகுந்தோளாம் | வாகு | அழகு - புயம் (௨) |
| மாசியேமகமோர்மாதம், | மாசி | மகநட்சத்திரம் - ஓர்மாதம் (௨) |
| பாகமேபிச்சைபங்காம் | பாகம் | பிச்சை - பங்கு (௨) |
| பயோதரம்புயலேகொங்கை, | பயோதரம் | மேகம் - முலை (௨) |
| வாகைபண்பொழுக்கம்வெற்றி | வாகை | குணம்-ஒழுக்கம்-விசயம் - தவம்- |
| தவந்தொழில்வழங்கன்மிக்காம். | | வேலை-கொடுத்தல்-மிகுதி (எ) |
| 14—கச. | | கச. |
| நோக்கென்பதழகுபார்வை | நோக்கு | அழகு - கண் (௨) |
| நுதலென்பபுருவநெற்றி, | நுதல் | புருவம் - நெற்றி (௨) |
| சேக்கையேமிருகந்துஞ்சு | சேக்கை | விலங்கின் படுக்கையிடம் - |
| மிடமுலைசிறந்தபாயல், | | முலை - பாயல் (௩) |
| பூக்கமேகமுகூரென்ப | பூக்கம் | கமுகமரம் - ஊர் (௨) |
| புலிங்கந்தீப்பொறியூர்ப்புள்ளாம், | புலிங்கம் | நெருப்புப்பொறி-ஊர்க்குருவி(௨) |
| ஆக்கம்பூமகள்செல்வப்பேர் | ஆக்கம் | இலக்குமி - செல்வம் (௨) |
| அறல்கருமணனீராமே. | அறல் | கருமணல் - நீர் (௨) |
| 15—கரு. | | கரு. |
| சீகரங்கரகம்வீசுங் | சீகரம் | கரகம் - சாமரம் - துளி (௩) |
| கவரியுந்திவலையும்பேர், | | |
| சாகரந்துயிலொழித்தல் | சாகரம் | நித்திரையொழிப்பு - கடல் (௨) |
| சமுத்திரமிருபேர்சாற்றும், | | |
| காகுளிதவிசுகண்டத் | காகுளி | ஆசனம் - மிடற்றெழுமோ |
| தெழுமொலியிசையுங்காட்டும், | | சை - இசை (௩) |
| ஈகைபொன் கொடையிண்டைப் | ஈகை | பொன் - கொடுத்தல் - இண் |
| பேர் | | டங்கொடி (௩) |
| யிரவியேமலையாதித்தன். | இரவி | மலை - சூரியன் (௨) |
| 16—கசு. | | கசு. |
| தகையென்பதழகுபண்பு | தகை | அழகு - குணம் |

| | | |
|---|---|---|
| தகையொடுபெருமைநாற்பேர், | | அன்பு - பெருமை (௩) |
| அகியென்பதரவிரும்பாம் | அகி | பாம்பு - இரும்பு (௨) |
| அரிட்டமேகள்ளுங்காக்கை, | அரிட்டம் | கள் - காக்கை (௨) |
| ககமென்பதம்புபுள்ளாம் | ககம் | அம்பு - பறவை (௨) |
| கடுத்தலொப்பையம்வேகம், | கடுத்தல் | உவமை - சந்தேகம் - சீக்கிரம் (௩) |
| அகவல்பாமயில்குரல்கூத்து | அகவல் | ஓர்பா - மயிலொலி - ஆடல் (௩) |
| அந்தமேயழகீறென்ப. | அந்தம் | அழகு - முடிவு (௨) |
| 17—௧௭. | | ௧௭. |
| அக்கென்பவிடைமுரிப்பு மணிசங்குமணியுமாகும், | அக்கு | இடபத்தின் முரிப்பு - சங்குமணி (௨) |
| நகுகலோநகையுண்டற்பேர் | நகுதல் | சிரிப்பு - புசித்தல் (௨) |
| ஞாட்பமர்பாரங்கூட்டம், | ஞாட்பு | யுத்தம் - கனம் - கூட்டம் (௩) |
| இக்கென்பகரும்புகள்ளாம் | இக்கு | கரும்பு - கள் (௨) |
| ஈரமேகுளிர்ச்சியன்பு, | ஈரம் | குளிர்ச்சி - அன்பு (௨) |
| மக்கண்மானுடர்சிறார்பேர் | மக்கள் | மனிதர் - பிள்ளை (௨) |
| வரைதலேகொள்ளனீக்கல். | வரைதல் | கொள்ளுதல் - தள்ளுதல் (௨) |
| 18—௧௮. | | ௧௮. |
| கேகயமஞ்ஞையோர்நா டசுணமாக்கிளத்துமுப்பேர், | கேகயம் | மயில் - ஓர்நாடு - அசுணப்புள் (௩) |
| தோகையேமயில்வான்மஞ்ஞை விலங்கின்வால்சொல்லுமுப்பேர், | தோகை | மயில்வால் - மயில் - மிருகத்தின்வால் (௩) |
| போகமேபாம்பின்மெய்யும் போகத்தின்விகற்பமாகும், | போகம் | பாம்பினுடல் - போகத்தின் வேறுபாடு (௨) |
| போகுதனெடுமைநேர்மை போகுதலென்னுமுப்பேரே. | போகுதல் | நீளம் - நேர்மை - போதல் (௩) |
| 19—௧௯. | | ௧௯. |
| கைக்கிளையிசைவிகற்ப மொருதலைக்காமமும்பேர், | கைக்கிளை | இராகத்தின் வேறுபாடு - ஒருதலைக்காமம் (௨) |
| சுக்கைதாரகைமாலைப்பேர் | சுக்கை | நட்சத்திரம் - பூமாலை (௨) |
| சூத்திரம்பொறிநூனூற்பா, | சூத்திரம் | இயந்திரம் - பஞ்சினூல் - இலக்கணச்சூத்திரம் (௩) |
| எக்கரேசொரிதலோடு குவிதலுமிருபேரென்ப, | எக்கர் | சொரிதல் - குவிதல் (௨) |
| மொக்குளேகுமிழிபூவின் முகுளமென்மொழியலாமே. | மொக்குள் | நீர்க்குமிழி - பூவரும்பு (௨) |

ககரவெதுகை முற்றிற்று.

## உ - வது. ஙகரவெதுகை.

| | | |
|---|---|---|
| 20—௨௰. | | |
| புங்கமேயுயர்ச்சியம்பு பொருமம்பிற்குதையுமுப்பேரே | புங்கம் | உயரம் - அம்பு - அம்புக்குதை (௩) |
| திங்களம்புலிமாதப்பேர் | திங்கள் | சந்திரன் - மாதம் (௨) |
| சித்திரனோவன்றச்சன், | சித்திரன் | சித்திரகாரன் - தச்சன் (௨) |

| | | |
|---|---|---|
| கங்கென்பவரம்பின்பக்கங்<br>கருந்தினைபருந்துமாமே, | ஙங்கு | வரம்பின்பக்கம் - கருந்தினை-<br>பருந்து (௩) |
| தொங்கலேபீலிக்குஞ்சந்<br>தூக்கொடுதொடுத்தமாலை. | தொங்கல் | பீலிக்குஞ்சம் - தூக்கு - தொ<br>டுத்தமாலை (௩) |
| 21—௨ | | ௨. |
| சங்கமேகணைக்காலோரெண்<br>சவைசங்குபுலவர்நெற்றி | சங்கம் | கணைக்கால் - ஓரிலக்கம் - கூட்<br>டம்-சங்கு-புலவர்-நெற்றி (௬) |
| பங்கென்பமுடமேயாகும்<br>பாதியுஞ்சனியுமேற்கும், | பங்கு | முடம் - பாதி - சனி (௩) |
| வங்கமேவெள்ளிநாவாய்<br>வழுதலையீயமாமே, | வங்கம் | வெள்ளி - மரக்கலம் - வழு<br>தலை - ஈயம் (௪) |
| அங்கணஞ்சேறுமுற்ற<br>மாஞ்சலதாரைக்கும்பேர். | அங்கணம் | சேறு - முன்றில் - சலதாரை (௩) |
| 22—௩. | | ௩. |
| ஞாங்கர்வேல்பக்கமுன்பு<br>மேலெனநான்குமாகும், | ஞாங்கர் | வேலாயுதம் - பக்கம் - முன்<br>பு - மேல் (௪) |
| தூங்கலேகூத்தம்யானை<br>துயில்சோம்பு தராசுதாழ்தல், | தூங்கல் | கூத்து-யானை-நித்திரை-சோ<br>ம்பல்-தராசு-தாழ்தல் (௬) |
| வாங்கலேவளைத்தல்கொள்ளல் | வாங்கல் | வளைத்தல் - கொள்ளுதல் (௨) |
| வையென்பகூர்மைவைக்கோல், | வை | கூர்மை - வைக்கோல் . (௨) |
| வேங்கைபொன்புலிமரப்பேர் | வேங்கை | பொன் - புலி - ஓர்மரம் (௩) |
| வீநீக்கம்பூப்புட்சாவாம். | வீ | நீக்கம் - மலர்-பறவை - சாவு(௪) |
| 23—௪. | | ௪. |
| மங்குல்காரிருள்விண்மூப்பேர் | மங்குல் | மேகம் - இருள் - ஆகாயம் (௩) |
| மருந்தமுதொடுமருந்தாம், | மருந்து | அமுதம் - மருந்து . (௨) |
| பங்கியேபிறமயிர்க்கும்<br>பகருமாண்மயிர்க்கும்பேராம், | பங்கி | பிறமயிர் - குடுமி (௨) |
| அங்கதம்பன்னகந்தோ ளணி<br>யுடன்வசைச்சொல்லாகும், | அங்கதம் | பாம்பு - வாகுவலயம்-வசைச்<br>சொல் (௩) |
| பங்கமேசேறுதூசு<br>பழுதொடுபின்னமாமே | பங்கம் | சேறு - வஸ்திரம் - குற்றம் -<br>. வேறுபாடு (௪) |
| 24—௫. | | ௫. |
| அங்கமேயுடலுறுப்பென்<br>பாறங்கங்கட்டிலும்பேர், | அங்கம் | உடல் - அவயவம் - எலும்பு-<br>வேதாங்கம் - கட்டில் (௫) |
| பிங்கலம்பொன்னும்பொன்னி<br>றத்தையும்பேசலாகும், | பிங்கலம் | பொன் - பொன்னிறம் (௨) |
| பொங்கரேமரத்தின்கோடு<br>பொருப்புயரிலவும்பேர், | பொங்கர் | மரக்கொம்பு - மலை - இலவ<br>மரம் (௩) |
| பொங்கலேகொதித்தன்மிக்காம் | பொங்கல் | பொங்குதல் - மிகுதி (௨) |
| பொச்சாப்புமறவிதீதாம். | பொச்சாப்பு | மறதி - பொல்லாங்கு (௨) |

ஙகரவெதுகை முற்றிற்று.

## ௩ - வது. சகரவெதுகை.

| | | |
|---|---|---|
| 25—௧. | | ௧. |
| பாசனமென்பசுற்றம்<br>பாண்டமுண்கலமும்பன்னும், | பாசனம் | உறவு - பாத்திரம்-உண்கலம் (௩) |
| வாசமேயிருப்பிடம்பூ<br>மணம்புள்ளின்சிறகுதூசாம், | வாசம் | இருப்பிடம் - பூமணம் - பறவையினிறகு - வஸ்திரம் (௪) |
| கோசமேமதிலுறுப்பாண்<br>குறிமுட்டை முறைபண்டாரம் | கோசம் | மதிலுறுப்பு - ஆண்குறி-முட்டை-புத்தகம்-பொக்கசம் (௫) |
| தேசிகன்வணிகன்றேசாந்<br>திரியொடுகுருவுமாமே. | தேசிகன் | செட்டி - தேசாந்திரி - குரு (௩) |
| 26—௨: | | ௨. |
| மூசன்மொய்த்திடல்சாவென்ப | மூசல் | மொய்த்தல் - சாவு (௨) |
| முடலையேதிரட்சியுண்டை, | முடலை | திரண்டவடிவு - உருண்டைவடிவு (௨) |
| கீசகங்குரங்குவேயாம் | கீசகம் | குரங்கு - மூங்கில் (௨) |
| கேழ்நிறமொளியொப்பாகும், | கேழ் | நிறம் - பிரகாசம் - ஒப்பு (௩) |
| வீசலேயெறிதலீவாம் | வீசல் | எறிதல் - கொடுத்தல் (௨) |
| வெம்மையுட்டினம்விருப்பம், | வெம்மை | வெப்பம் - ஆசை (௨) |
| கேசரமகிழ்பூந்தாதாம், | கேசரம் | மகிழமரம் - பூந்தாது (௨) |
| கிருட்டியோரீற்றுப்பன்றி. | கிருட்டி | தலையீற்றுப்பசு - பன்றி (௨) |
| 27—௩. | | ௩. |
| அசிபடைக்கலமேவாளே<br>யவமதிச்சிரிப்புமுப்பேர், | அசி | ஆயுதம் - வாள் - அவமதிச்சிரிப்பு (௩) |
| நிசியிராமஞ்சள்பொன்னும் | நிசி | இரவு - மஞ்சள் - பொன் (௩) |
| நீர்புனல்குணம்பூராடம், | நீர் | சலம் - பண்பு - பூராடநக்ஷத்திரம் (௩) |
| பிசியென்பபொய்யுஞ்சோறும்<br>பேசரும்பொருளுமுப்பேர், | பிசி | பொய் - சோறு - அரும்பொருள் (௩) |
| சுசிகோடைசுத்தந்தீயாம் | சுசி | கோடைகாலம் - சுத்தம் - நெருப்பு (௩) |
| சுடர்விளக்கிரவியங்கி. | சுடர். | விளக்கு - சூரியன்-நெருப்பு (௩) |
| 28—௪. | | ௪. |
| ஆசெனபவிரைவுகுற்ற<br>மற்பமெய்க்கவசநாறபேர், | ஆசு | சீக்கிரம் - குற்றம் - சிறுமை-மெய்க்கவசம் (௪) |
| காசென்பகோழைகுற்றங்<br>கதிர்விடுமணிமுப்பேரே, | காசு | கோழை - குற்றம் - இரத்தினம் (௩) |
| ஆசினிபலாவிசேட<br>மரவுரிமரக்காழ்விண்ணும் | ஆசினி | ஈரப்பலா - மரவுரி - மரவயிரம் - ஆகாயம் (௪) |
| தேசிகமழகுகாந்தி திசைச்சொல்<br>லோர்கூத்துச்செம்பொன் | தேசிகம் | அழகு - ஒளி - அவ்வந்நாட்டுச்சொல் - ஓர்கூத்து - செம்பொன் (௫) |
| 29—௫. | | ௫. |
| பச்சையேமரகதந்தோல்<br>பரிமளப்புதன்மால்புந்தி, | பச்சை | மரகதம் - தோல் - ஓர் வாசனைப்புதல்-திருமால்-புதன் (௫) |

| | | |
|---|---|---|
| கச்சையென்பதுதழும்பு<br>கயிறொடுகவசமுப்பேர், | கச்சை | உடற்றழும்பு - கயிறு-கவசம் (௩) |
| செச்சைமைவெட்சிதேய்வை | செச்சை | ஆடு-வெட்சி-சாந்தின்குழம்பு (௩) |
| திகையென்பதிசைசுணங்காம், | திகை | திசை-தேமல் (௨) |
| மிச்சையேபொய்த்தலாகு<br>மிடித்தலஞ்ஞானமும்பேர். | மிச்சை | பொய் - தரித்திரம் - அறிவில்லாமை (௩) |
| 30—௬. | | ௬. |
| பிச்சமாண்மயிரும்பீலிக்<br>குடையும்வெண்குடையுமாகும், | பிச்சம் | குடுமி - பீலிக்குடை - வெள்ளைக்குடை (௩) |
| கச்சம்யானைக்கழுத்திற்<br>கயிறளவொடுமரக்கால், | கச்சம் | யானைக்கழுத்திற்கயிறு - அளவு - மரக்கால் (௩) |
| எச்சமேகுறைசேயாகம் | எச்சம் | குறைவு - புத்திரன் - யாகம் (௩) |
| இபமென்பமரக்கோடியானை, | இபம் | மரக்கொம்பு - யானை (௨) |
| அச்சமேயகத்திமைம்மை<br>யஞ்சலிம்முப்பேராமே. | அச்சம் | அகத்திமரம் - அச்சவடிவு - பயம் (௩) |
| 31—௭. | | ௭. |
| ஆசையேதிசைபொன்னன்பாம் | ஆசை | திக்கு - பொன் - இஷ்டம் (௩) |
| ஆகுலம்வருத்தமோசை, | ஆகுலம் | வருத்தம் - சத்தம் (௨) |
| காசையேகாயாநாணல் | காசை | காசாஞ்செடி - நாணற்புல் (௨) |
| காமர்தானழகுகாதல், | காமர் | அழகு - ஆசை (௨) |
| பாசமேகயிறுகூளி<br>பகருசித்தொளையன்பாகும், | பாசம் | கயிறு - பிசாசம் - ஊசித்தொளை - அன்பு (௪) |
| தூசென்பதாடையானைப்<br>புரசைதூசிப்படைப்பேர் | தூசு | புடைவை - யானைப்புரசை - படைமுன்னணி (௩) |
| 32—௮. | | ௮. |
| தாசியேபரணிசூளை | தாசி | பரணிநக்ஷத்திரம் - வேசி (௨) |
| தளியென்பதுளியேகோயில், | தளி | துளி - கோயில் (௨) |
| வேசரிகழுதையேகோ<br>வேறுவேசரியுமாகும், | வேசரி | கழுதை - கோவேறுகழுதை (௨) |
| ஆசுகம்பகழிகாற்றும் | ஆசுகம் | அம்பு - காற்று (௨) |
| அந்தரியுமையேதுர்க்கை, | அந்தரி | பார்வதி - துர்க்கை (௨) |
| கோசிகஞ்சாமவேதங்<br>கூறுபட்டாடைக்கும்பேர். | கோசிகம் | சாமவேதம் - பட்டுவஸ்திரம் (௨) |
| 33—௯. | | ௯. |
| பசுவேறுசீவனுமாம் | பசு | இடபம் - உயிர் - பசு (௩) |
| பாரதிவாணிதோணி, | பாரதி | சரஸ்வதி - தோணி (௨) |
| வசுவேயான்கன்றும்பொன்னும்<br>வசுக்களுந்தீயுநாற்பேர். | வசு | பசுவின்கன்று - பொன் - தேவர்களிலோர் பிரிவாகிய அஷ்டவசுக்கள்-நெருப்பு (௪) |
| அசமூவாண்டுநெல்லாடாம் | அசம் | மூன்றுவருடத்துநெல் - ஆடு (௨) |
| அணையென்பகரையேமெத்தை, | அணை | கரை - மெத்தை (௨) |
| சசியென்பகர்ப்பூரஞ்சந்<br>திரனயிராணிமுப்பேர். | சசி | கர்ப்பூரம் - சந்திரன் - இந்திராணி (௩) |
| 34—௧௦. | | ௧௦. |
| விசும்புபொன்னுலகமேகம்<br>விண்ணொடுதிசையுநாற்பேர், | விசும்பு | தேவலோகம் - மேகம் - ஆகாயம் - திசை (௪) |

| | | | |
|---|---|---|---|
| தசும்புநற்குடமிடாவாம் | தசும்பு | குடம் - மிடா | (௨) |
| சாத்தனேயருகனையன், | சாத்தன் | அருகன் அரிகரபுத்திரன் | (௨) |
| இசைபுகழ்கிளவிபாட்டாம் | இசை | புகழ் - சொல் - பாட்டு | (௩) |
| ஏங்கலேயொலியிரங்கல், | ஏங்கல் | சத்தம் - அழுதல் | (௨) |
| பிசுனனேகோளன்பொய்ய<br>னுலோபனும்பேசுமுப்பேர். | பிசுனன் | கோளன் - பொய்யன் - உலுத்தன் | (௩) |
| 35—௩௫. | | ௧௪. | |
| வச்சிரஞ்சதுரக்கள்ளி<br>வயிரமேகுலிசமுப்பேர், | வச்சிரம் | சதுரக்கள்ளி - வயிரம் - வச்சிராயுதம் | (௩) |
| நொச்சியேசிந்துவார<br>மதில்சிற்றூர் நுவலலாமே, | நொச்சி | நொச்சிச்செடி - மதில் - சிற்றூர் | (௩) |
| தச்சனேசித்திரைப்பேர்<br>தபதியன்றனுமாகும், | தச்சன் | சித்திரைநக்ஷத்திரம் - தச்சன் | (௨) |
| உச்சிநண்பகலுச்சிப்பேர் | உச்சி | நடுப்பகல் - உச்சந்தலை | (௨) |
| உறுப்பவயவமுடம்பாம். | உறுப்பு | அவயவம் - சரீரம் | (௨) |
| 36—௩௬. | | ௧௫. | |
| பாசென்பபசுமைமூங்கில் | பாசு. | பசுமை - மூங்கில் | (௨) |
| பப்பென்ப பரப்போடொப்பாம், | பப்பு | பரப்பு - ஒப்பு | (௨) |
| மாசென்பசிறுமைகுற்ற<br>மழையழுக் கொடுநாற் பேரே, | மாசு | அற்பம் - குற்றம் - மேகம் - அழுக்கு | (௪) |
| கேசம்பெண் மயிர்க்குமாண்பான்<br>மயிருக்குங் கிளத்தலாகும், | கேசம் | கூந்தல் - குடுமி | (௨) |
| வாசியேகுழன்மூன்றன்மா<br>வாசியென்னேவலும்பேர். | வாசி | இசைக்குழல் - அச்சுவினிநக்ஷத்திரம் - குதிரை - வாசியென்னேவல் | (௪) |
| 37—௩௭. | | ௧௬. | |
| மிசையென்பதுணவுமேடு<br>மீமிசைச் சொல்லுமுப்பேர், | மிசை | உணவு - மேடு - மீமிசைச்சொல் | (௩) |
| விசயமேவென்றிவெல்லம்<br>வெங்கதிர் மண்டலப்பேர், | விசயம் | வெற்றி - வெல்லம் - சூரியமண்டலம் | (௩) |
| முசலியேயுடும்புதாழை<br>மூர்த்தியவிராமனோந்தி, | முசலி | உடும்பு-தாழை பலதேவன்-ஓந்தி | (௪) |
| வசதிநல்லிடமூர்வீடாம் | வசதி | நல்லிடம் - ஊர் - வீடு | (௩) |
| வரனயன்பரமன்காந்தன். | வரன் | பிரமன் - சிவன் - தலைவன் | (௩) |

சகரவெதுகை முற்றிற்று

---

## ௫-வது. ஞகரவெதுகை.

| | | | |
|---|---|---|---|
| 38—௩௮. | | ௧. | |
| துஞ்சலேநிலைபேறுகுந்<br>துயில்சோம்புசாவுமாகும், | துஞ்சல் | நிலைபெறுதல் - நித்திரை - சோம்பல் - சாவு | (௪) |
| பஞ்சரஞ்செருந்திகூடாம் | பஞ்சரம் | செருந்திமரம் - கூடு | (௨) |
| பாதரேகழியர்காய்கர், | பாதர் | நெய்தனிலமாக்கள் - செட்டிகள் | (௨) |

| | | |
|---|---|---|
| கஞ்சமேதாளங்குல்லை கமலம்வெண் கலம்வட்டப்பம், | கஞ்சம் | தாளம் - கஞ்சா - தாமரை - வெண்கலம் - அப்பம். (ரு) |
| குஞ்சமீயோட்டிநாழி குறள் குன்றிகுறளைச்சொல்லே. | குஞ்சம் | ஈயோட்டி-நாழி - குறுமை - குன்றிக்கொடி - குறளைச் சொல் (ரு) |
| 39—ங௯. | | உ. |
| நெஞ்செனபமனமார்பின்பேர் | நெஞ்சு | மனம் - மார்பு (உ) |
| நிழல்செல்வங்குளிர்ச்சிசாயை, | நிழல் | செல்வம் - குளிர்ச்சி - நிழல் (ங) |
| மஞ்சுபூண்வலிவனப்பு மழையானை முதுகிவ்வைந்தே, | மஞ்சு | ஆபரணம் - வலிமை - அழகு - மேகம் - யானைமுதுகு (ரு) |
| வஞ்சிமேற்செல்வோரூர்பா வல்லிமென் மருங்குற் பெண்ணும் | வஞ்சி | பகைவர்மேற் செல்லுதல் - ஓரூர் - ஓர்பா - ஓர்கொடி - பெண் (ரு) |
| தஞ்சமேயெளிமையென்ப தருபற்றுக்கோடுமாமே. | தஞ்சம் | எளிமை - பற்றுக்கோல் (உ) |
| 40—௪0. | | ங. |
| அஞ்சனங்கறுப்புமைதிக் கானையிலொன்றுமுப்பேர், | அஞ்சனம் | கறுப்பு - மை - மேற்றிசை யானை (ங) |
| மஞ்சரியேபூங்கொத்து மாலைசெந்தளிருமாகும், | மஞ்சரி | பூங்கொத்து - பூமாலை - தளிர் (ங) |
| அஞ்சலிவணங்கல்வாவற் பறவையுமாகுமென்ப, | அஞ்சலி | கும்பிடல் - வாவற்பறவை (உ) |
| இஞ்சியேபுரிசையிஞ்சி | இஞ்சி | மதில் - இஞ்சி (உ) |
| எறுழெனபவலிதண்டாமே. | எறுழ் | வலிமை - தண்டாயுதம் (உ) |
| 41—௪௧. | | ச. |
| கிஞ்சுகமுருக்குச்செம்மை | கிஞ்சுகம் | முருக்கமரம் - சிவப்பு (உ) |
| கிருட்டினன்றன்மால்பார்த்தன், | கிருட்டினன் | கண்ணன் - அருச்சுனன் (உ) |
| கஞ்சனமேகண்ணுடி கரிக்குருவிக்கும்பேரே, | கஞ்சனம் | கண்ணுடி - கரிக்குருவி (உ) |
| பஞ்சமேசிறுமையைந்தாம் | பஞ்சம் | சிறுவிலைக்காலம் - ஐந்து (உ) |
| பகழியம்பிதன்குதைப்பேர், | பகழி | அம்பு - அம்புக்குதை (உ) |
| வஞ்சனைமாயைபொய்யாம் | வஞ்சனை | மாயை - பொய் (உ) |
| மாயன்மால்கருநிறத்தோன். | மாயன் | திருமால் - கருநிறத்தோன் (உ) |
| 42—௪உ. | | ரு. |
| குஞ்சியாண்மயிர்ப்புட்பார்ப்புக் குன்றியின்புதன்முப்பேரே, | குஞ்சி | குடுமி - பறவைக்குஞ்சு - குன்றிப்புதர் (ங) |
| வஞ்சமேகபடம்வாளாம் | வஞ்சம் | கபடம் - வாளாயுதம் (உ) |
| மாயம்வஞ்சனைபொய்யென்ப, | மாயம் | வஞ்சனை - பொய் (உ) |
| கஞ்சனேகுறளன்வேதன் | கஞ்சன் | குறியன் - பிரமன் (உ) |
| களங்கந்தானழுக்குக்குற்றம், | களங்கம் | அழுக்கு - குற்றம் (உ) |
| கஞ்சிகைசிவிகையாடை கட்டிடுதிரையுமாமே. | கஞ்சிகை | தண்டிகை - வஸ்திரம் திரைச்சீலை (ங) |

ஞகரவெதுகை முற்றிற்று.

## ௫ - வது. டகரவெதுகை.

| | | |
|---|---|---|
| 43—௪௩. | | ௧. |
| நடலைவஞ்சனைபொய்யென்ப<br>நடுங்கியநடுக்கமும்பேர், | நடலை | கபடம் - பொய் - அசைவு (௩) |
| மடல்பனையேடுபோல்வ<br>மலரிதழோர்நூற்கும்பேர், | மடல் | பனையேடுபோல்வன - பூவி<br>தழ் - ஓர்பிரபந்தம் (௩) |
| படர்கடைநினைப்புநோவாம்<br>பகர்ந்திடல்வீரர்க்கும்பேர், | படர் | வழி - நினைப்பு - துன்பம் -<br>படைவீரர் (௪) |
| குடநகர்பசுவோர்கூத்துக்<br>கும்பமேகரும்பின்கட்டி. | குடம் | பட்டணம் - பசு - ஓர்கூத்து-<br>குடம் - வெல்லக்கட்டி (௫) |
| 44—௪௪. | | ௨. |
| மாடமேயுழுந்தோடில்லாம் | மாடம் | உழுந்து - வீடு (௨) |
| மழையென்பகுளிர்ச்சிமேகம், | மழை | குளிர்ச்சி - மேகம் (௨) |
| கூடமின்மறைவுகொல்லன்<br>சம்மட்டிகுவட்டினுச்சி, | கூடம் | வீடு - மறைவு - கொல்லன்சம்<br>மட்டி - மலையினுச்சி (௪) |
| சேடனோர்சாதிபாங்கன்<br>செகந்தாங்குமனந்தனென்ப, | சேடன் | ஓர்சாதியான் - தோழன்-பூமி<br>தாங்கு மனந்தனென்னும்<br>பாம்பு (௩) |
| கேடகம்பரிசைவேறோர்<br>கேடிலூர்பலகையும்பேர். | கேடகம் | தோற்பலகை-ஊர்-கேடகம் (௩) |
| 45—௪௫. | | ௩. |
| இடங்கரேமுதலைதூர்த்தர்<br>குடங்கரிம்முப்பேரென்ப, | இடங்கர் | முதலை - விடர் - குடம் (௩) |
| முடங்கலேமடங்கல்கைதை<br>மூங்கிலேயோலையும்பேர், | முடங்கல் | மடங்குதல் - தாழை - மூங்<br>கில் - வியாதி - ஓலை (௫) |
| படங்குமேற்கட்டியென்ப<br>பகர்பெருங்கொடியுமாகும், | படங்கு | மேற்கட்டி - பெருங்கொடி (௨) |
| விடங்கமேர்கொடிகொடுங்கை | விடங்கம் | அழகு - துகிற்கொடி - கொ<br>டுங்கை (௩) |
| மிதவையேதெப்பஞ்சோறும். | மிதவை | தெப்பம் - சோறு (௨) |
| 46—௪௬. | | ௪. |
| குடிஞைபுட்பொதுவும்யாறுங்<br>கூகையுமாகுமென்ப, | குடிஞை | பறவைப்பொது, நதி - கோட்<br>டான் (௩) |
| தடிவயலுலக்கைவில்லுந்<br>தண்டுமின்றசையுடும்பாம், | தடி | கழனி-உலக்கை-தண்டாயுதம்-<br>மின்னல் - தசை - உடும்பு (௬) |
| தொடிவளையொருபலப்பேர்<br>சூழ்ந்தகங்கணமுமாகும் | தொடி | கைவளை-ஒருபலம்-கங்கணம் (௩) |
| மடியடங்குதலேசோம்பு<br>வயிறுநோய் புடைவைதாழை. | மடி | அடங்குதல்-சோம்பல்-வயிறு-<br>வியாதி-புடைவை-தாழை (௬) |
| 47—௪௭. | | ௫. |
| படிவமேவடிவநோன்பாம் | படிவம் | உருவம் - நோன்பு (௨) |
| பந்தமேகிளையுங்கட்டும், | பந்தம் | உறவு - கட்டு (௨) |
| வெடியச்சம்பரிமளிக்கு<br>மென்புகைவெளியும்பேர், | வெடி | பயம் - நறும்புகை - வெளி (௩) |

| | | |
|---|---|---|
| துடியேலம்பறைகாலப்பேர் | துடி | ஏலம் - குறிஞ்சிப்பறை - ஓர் காலம் (௩) |
| தூத்தூய்தூன்பற்றுககோடாம், | தூ | சுத்தம்-தசை-பற்றுக்கோடு (௩) |
| கொடிறுபூசங்கதுப்பாம் | கொடிறு | பூசநக்ஷத்திரம்-கபோலம் (௨) |
| துரவையேகடலோர்கூத்து. | துரவை | கடல் - ஓர்கூத்து (௨) |
| 48—௪௮. | | ௬. |
| கடிகைநாழிகையேதுண்டங் கதவிடுதாளேமுப்பேர், | கடிகை | நாழிகை - துணிக்கை - கதவிடுதாள் (௩) |
| படிறுபொய்களவிரண்டாம் | படிறு | பொய் - களவு (௨) |
| பகர்தலேவிற்றல்பேசல், | பகர்தல் | விற்றல் - பேசல் (௨) |
| சுடிகையேமகுடமுச்சி சுட்டியுமிட்டபேரே | சுடிகை | கிரீடம் - நடுத்தலை - நெற்றிச் சுட்டி (௩) |
| இடியிடிப்பேரேசென்மா வேற்றிமுறுதிச்சொல்லே. | இடி | இடி-சென்மா-உறுதிச்சொல் (௩) |
| 49—௪௯. | | ௭. |
| நாடிநாசிகைநரம்பாம் | நாடி | மூக்கு - நரம்பு (௨) |
| நந்தல்கேடுடனேயாக்கம், | நந்தல் | கேடு - ஆக்கம் (௨) |
| பாடியேநகரநாடு பாசறையாயரூர்ப்பேர், | பாடி | நகரம்-நாடு-முனைமேற் சென்றோருறைவிடம்-ஆயர்பாடி (௪) |
| கோடிகந்துகில்பூந்தட்டாம் | கோடிகம் | வஸ்திரம் - பூந்தட்டு (௨) |
| குடம்பையேமுட்டைகூடு, | குடம்பை | முட்டை - கூடு (௨) |
| கோடியெண்புதுமைதுசாம் | கோடி | ஓரெண் - புதுமை - வஸ்திரம் (௩) |
| குடுமியேவெற்றியுச்சி. | குடுமி | விசயம் - உச்சி (௨) |
| 50—௫௦. | | ௮. |
| உடுவிண்மீனிடங்குநாவா யோட்டுங்கோலம்பிலீர்க்காம் | உடு | நக்ஷத்திரம்-அகழி-மரக்கலமோட்டுங்கோல்-அம்பினிறகு (௪) |
| கடுவிடமுள்ளுத்தானே யரிதகிகசப்புநாற்பேர், | கடு | நஞ்சு-முள்-கடுமரம்-கசப்பு (௪) |
| படுமரக்குலேயேகள்ளுப் பரவுநீர்நிலைநன்மைப்பேர், | படு | மரக்குலை - கள் - குளம் - நன்மை (௪) |
| படுதலேயொலியின்றாதல் பகரிலுண்டாதல்பூத்தல். | படுதல் | சத்தம் - இல்லாமை - உண்டாதல் - பூத்தல் (௪) |
| 51—௫௧. | | ௯. |
| மாடுபொன்பக்கஞ்செல்வம் | மாடு | பொன் - பக்கம் - செல்வம் (௩) |
| வைகல்வைகறைநாடங்கல், | வைகல் | விடியற்காலம் - நாள் - தங்குதல் (௩) |
| சேடென்பபெருமைநன்மை திரட்சியேயழகுநாற்பேர், | சேடு | பெருமை - நன்மை - திரண்டவடிவு - அழகு (௪) |
| பாடிடம்பெருமையோசை | பாடு | இடம் - பெருமை - ஒலி (௩) |
| பட்டேபட்டாடைசிற்றூர் | பட்டு | பட்டுவஸ்திரம் - சிற்றூர் (௨) |
| ஈடென்பநெகிழ்வேயொப்பே வலியொடுபெருமையென்ப. | ஈடு | நெகிழ்தல் - ஒப்பு - வலிமை - பெருமை (௪) |
| 52—௫௨. | | ௧0. |
| மடையென்பமதகுசோறு மணிப்பணிக்கடைப்பூட்டும் பேர், | மடை | மதகு - சோறு - ஆபரணக் கடைப்பூட்டு (௩) |

| | | |
|---|---|---|
| படைபடைக்கலங்கலப்பை<br>படுக்கைபல்லணமேதானை, | படை | ஆயுதம் - கலப்பை-நித்திரை-<br>குதிரைச்சேணம்-சேனை (௫) |
| இடைநடுவென்பமற்று<br>மிடப்பெயர்நுசுப்புமாமே, | இடை | நடு - இடம் - இடை (௩) |
| மடமறியாமைசத்திர<br>மன்னியமுனிவாசப்பேர். | மடம் | அறிவின்மை - சத்திரம்-முனி<br>வரிருப்பிடம் (௩) |
| 53—௫௩. | | ௧௪. |
| வாடையென்பதுதான்வீதி<br>வடகாற்றுத்தானுமாமே, | வாடை | தெரு - வடகாற்று (௨) |
| ஆடுமேழகம்வெற்றிப்பேர் | ஆடு | ஆடு - வெற்றி (௨) |
| அல்கனாட்சுருங்கல்வைகல், | அல்கல் | நாள் - குறைதல் - தங்கல் (௩) |
| கோடைமேல்காற்றினோடு<br>குதிரைவெவ்காந்தளென்ப, | கோடை | மேல்காற்று - குதிரை - வெ<br>ண்காந்தள் (௩) |
| ஓடைநீர்நிலைகிடங்கே<br>யொளிமணிப்பட்டமும்பேர். | ஓடை | தடாகம் - அகழி - நெற்றிப்<br>பட்டம் (௩) |
| 54—௫௪. | | ௪௨. |
| அடுப்பென்பபரணிநாளே<br>யச்சமேசுல்லிமுப்பேர், | அடுப்பு | பரணிநக்ஷத்திரம் - பயம் -<br>அடுப்பு (௩) |
| வடுச்செம்புதழும்புவண்டாம் | வடு | செம்பு - தழும்பு - வண்டு (௩) |
| மத்தகநெற்றிசென்னி, | மத்தகம் | நெற்றி - தலை (௨) |
| இடக்கரேமறைத்தவார்த்தை<br>குய்யமுமென்பநூலோர், | இடக்கர் | மறைத்தசொல் - குடம் (௨) |
| கடைப்பிடிமறப்பிலாமை<br>கருதியதேற்றமாமே. | கடைப்பி<br>டி | மறவாமை - தேற்றம் (௨) |
| 55—௫௫. | | ௧௩. |
| பட்டமேயோடைதூசு<br>பதவிவாள்கவரிமாவாம், | பட்டம் | குளம் - வஸ்திரம் - பதவி -<br>வாள் - சவரிமா (௫) |
| பூட்டமேகாகமாகும்<br>புடைவையுநிறைவுமப்பேர், | புட்டம் | காக்கை - சீலை - நிறைவு (௩) |
| குட்டமேதொழுநோயாழங்<br>குளமெனப்பெயர்முப்பாற்றே, | குட்டம் | குஷ்டவியாதி-ஆழம்-குளம் (௩) |
| வட்டமேபரிசைநீர்ச்சால்<br>வலயுங்கைம்மணிதூசுர்கோள். | வட்டம் | கேடகம் - நீர்ச்சால் - வட்ட<br>வடிவு - கைம்மணி - சீலை-<br>பரிவேடம். (௬) |
| 56—௫௬. | | ௧௪. |
| திட்டையேயுரலுமேடுந்<br>திண்ணையுநண்ணுமுப்பேர், | திட்டை | உரல் - மேடு - திண்ணை (௩) |
| தட்டைவேய்தினைத்தாள்கிள்ளை<br>தனைக்கடிகோலேமுண்டம், | தட்டை | மூங்கில் - தினைத்தாள் - கிளி<br>கடிகோல் - மொட்டை (௪) |
| கிட்டியேதலையீற்றுவாங்<br>கிருட்டியாந்தாளமும்பேர், | கிட்டி | தலையீற்றுப்பசு - பன்றி -<br>கைத்தாளம் (௩) |
| கட்டளைநிறைகல்லொப்பே<br>யிட்டிகையியற்றலாணி. | கட்டளை | நிறையறிகருவி - உவமை -<br>செங்கலியற்றுங்கருவி -<br>உரையறிகருவி. (௪) |

| | | |
|---|---|---|
| 57—௫௭. | | ௧௫ |
| நாட்டங்கண்ணோர்பண்வாளாம் | நாட்டம் | கண் - ஓர்பண் - வாளாயுதம் (௩) |
| நாகுசங்கிளமைநத்தை, | நாகு | சங்கு - இளமை - நத்தை (௩) |
| ஓட்டமேலுதடேதோல்வி | ஓட்டம் | மேலுதடு - தோற்றல் (௨) |
| உயிரென்பகாற்றேசீவன், | உயிர் | காற்று - சீவன் (௨) |
| கோட்டங்கோண்படப்பைநாடு | கோட்டம் | கோணல் - மருதநிலத்தூர் - |
| கோயிலௌவியமான்கொட்டில் | | நாடு - கோயில் - அழுக் |
| | | காறு - தொழுவம் (௬) |
| தோட்டியங்குசங்கபாடம் | தோட்டி | யானைத்தோட்டி - கதவு (௨) |
| துணையென்பதளவுமொப்பும். | துணை | அளவு - ஒப்பு. (௨) |
| 58—௫௮. | | ௧௬. |
| தடமலைபெருமைகானஞ் | தடம் | மலை-பெருமை-வளைவு - வழி- |
| சரிகரையகலம்வாவி, | | குளக்கரை-அகலம்-குளம் (௭) |
| அடல்கொலைவலிபோராகும் | அடல் | கொல்லுதல் - வல்லமை-யுத் |
| | | தம் (௩) |
| அருத்தமேபொருள்பொன்பாதி, | அருத்தம் | சொற்பொருள்-பொன்-பாதி (௩) |
| உடல்பொருளாகமென்ப | உடல் | பொன் - உடல் (௨) |
| வோங்கல்வெற்புயரமூங்கில், | ஓங்கல் | மலை - உயர்ச்சி - மூங்கில் (௩) |
| விடபமேயிடபராசி | விடபம் | இடபவிராசி - இடபம் - மரக் |
| விடைமரக்கொம்புமுப்பேர். | | கொம்பு. (௩) |
| 59—௫௯. | | ௧௭. |
| கடகமேசேனைவட்டங் | கடகம் | சேனை - வட்டவடிவு - கைவ |
| கைவளைமதிற்பேரே, | | ளை - மதில் (௪) |
| வடகந்தோலுத்தவாளம் | வடகம் | தோல் - உல்லாசம் (௨) |
| வலமென்பதிடமேவெற்றி, | வலம் | இடம் - வெற்றி (௨) |
| படுவிகள்விற்பாள்குண்டம் | படுவி | கள்விற்பவள் - வசவி (௨) |
| பரமென்பகவசமெய்யாம், | பரம் | கவசம் - சரீரம் (௨) |
| நொடிபிதிர்கிளவியாகும் | நொடி | கைந்நொடி - சொல் (௨) |
| நூனநிச்சயமேகுன்றல். | நூனம் | நிச்சயம் - குறைதல் (௨) |
| 60—௬௦. | | ௧௮. |
| கடங்கயிறுவாக்கதுப்புக் | கடம் | கயிறு - யானைக்கவுள் - காடு - |
| கான்சுரமுடம்புநீதி, | | அருநெறி - சரீரம் - நியாய |
| குடங்கடாமீமம்யானைக் | | ம் - குடம் - யானைமதம் - |
| குழாங்கடன்முழவைந்தேழாம் | | சுடலை - யானைக்கூட்டம் - |
| | | கடன் - குடமுழா. (௧௨) |
| மடங்கலேயசனிசீய | மடங்கல் | இடி-சிங்கம்-இயமன்-வியாதி- |
| மறலிநோயுகமூழித்தீ, | | யுகம்-வடவாமுகாக்கினி (௬) |
| படங்கரிமுகபடாகற் | படம் | யானைமுகபடாம் - வஸ்திரம்- |
| றுகில்பாம்பின்பணமுப்பேரே. | | பாம்பின்படம். (௩) |
| 61—௬௧. | | ௧௯. |
| ஆடலேபெண்ணாண்கூடல் | ஆடல் | பெண்ணாண் கூடல்-வார்த்தை- |
| வார்த்தைகூத் தாடல்வென்றி, | | கூத்தாடல்-வெற்றி (௪) |
| பாடலஞ்சிவப்பிறேனுடு | பாடலம் | சிவப்பு-பாதிரிமரம்-குதிரை (௩) |
| பாதிரிகுதிரைமுப்பேர், | | |
| கோடரங்குரங்குசோலை | கோடரம் | குரங்கு-சோலை-மரக்கொம்பு- |
| கொம்பொடுகுதிரையாகும், | | குதிரை (௪) |

| | | |
|---|---|---|
| ஆடவர்புருடர்நாம மாமிளையவர்க்கும்பேரே. | ஆடவர் | ஆண்மக்கள் - இளைஞர் (உ) |
| 62—சுஉ. | | உ0. |
| கடிமணம்விரைவுகூர்மை காலம்பேய்விளக்கங்காப்பு, வடிவச்சம்வாசமையம் வரைவுவிம்மிதமேழாறும், | கடி | கலியாணம் - சீக்கிரம் - கூர்மை - காலம்-பிசாசம் - விளக்கம் - காவல் - அல்குல் - பயம் - வாசனை - சந்தேகம் - நீக்கல் - அதிசயம் (சரு) |
| வடுகேயிந்தளராகப்பேர் மருதயாழ்த்திறனுமாமே, | வடுகு | இந்தளராகம் - மருதயாழ்த்திறம் .(உ) |
| வடவையேகுதிரைப்பெட்டை யுவாப்பிடிவடவைத்தீயாம். | வடவை | பெண்குதிரை - பெண்யானை - ஊழித்தீ. (ங) |
| 63—சுங. | | உக. |
| கோடுசங்கூதுகொம்பு மரக்கொம்புவிலங்கின்கொம்பு நீடுசெய்வரம்புகுன்றின் முகடுநீர்க்கரையேழ்பேராம், | கோடு | சங்கு - ஊதுகொம்பு - மரக்கொம்பு - மிருகத்தின் கொம்பு - கழனிவரம்பு - மலையினுச்சி - நீர்க்கரை (எ) |
| மோடுமேடுதராமாகும் | மோடு | மேடு - வயிறு (உ) |
| முறுவலேநகைத்தல்பல்லாம், | முறுவல் | சிரித்தல் - பல் (உ) |
| ஆடியேயோர்மாதங்கண ணாடியுத்திராடமாமே. | ஆடி | ஓர்மாதம் - கண்ணாடி - உத்திராட நக்ஷத்திரம். (ங) |
| 64—சுச. | | உஉ. |
| தட்டுத்தேர்நடுவுகுற்றந் தட்டொடும்பரிசைமுட்டாம், | தட்டு | தேர்நடுவு - குற்றம் - தட்டு - கேடகம் - விக்கினம். (ரு) |
| செட்டிவாணிகன்செவ்வேளாம் | செட்டி | செட்டி - முருகன் (உ) |
| செப்புரைகரண்டகப்பேர், | செப்பு | சொல் - கரண்டகம் (உ) |
| மட்டென்பதெல்லைகள்ளாம் | மட்டு | எல்லை - கள் (உ) |
| மார்க்கமேசமயம்வீதி, | மார்க்கம் | சமயம் - தெரு (உ) |
| பட்டிகையென்பகச்சுப் பகடெனிரதமாமே. | பட்டிகை | முலைக்கச்சு - தெப்பம்-அரைஞாண். (ங) |
| 65—சுரு. | | உங. |
| கடைமுடிவிடவாயிற்பேர் | கடை | முடிவு - இடம் - வாயில் (ங) |
| களேபரம்பிணமுடம்பாம், | களேபரம் | பிரேதம் - சரீரம் (உ) |
| உடைதுகில்செல்வமென்ப | உடை | வஸ்திரம் - செல்வம் (உ) |
| உடுக்கைதன்னுமைதுகிற்பேர், | உடுக்கை | உடுக்கை - வஸ்திரம் (உ) |
| அடையிலைகனமேயப்ப [ம், மடுத்தல்செல்வழியைம்பேரா | அடை | இலை - பாரம் - அப்பம் - அடுத்தல் - வழி (ரு) |
| நடைவழியொழுக்கஞ்செல்வம் | நடை | வழி - ஒழுக்கம் - செல்வம் (ங) |
| நாரென்பகயிறன்பாமே. | நார் | கயிறு - இஷ்டம். (உ) |
| 66—சுசு. | | உச. |
| விடையெதிர்மொழியுமேறும் விடுத்தலும்விளம்புமுப்பேர், | விடை | எதிர்மொழி - இடபம் - அனுப்பல் (ங) |
| கிடைகிடையுவமைசெட்டி | கிடை | கிடை - உவமை - சடை (ங) |
| கீதமேயிசையும்வண்டும், | கீதம் | இராகம் - வண்டு (உ) |

| | | |
|---|---|---|
| படியங்கவடிசோபானம் | படி | குதிரையங்கவடி - கற்படி - |
| பகைகுணமுவமைபாராம், | | பகை-பண்பு-ஒப்பு-பூமி (௬) |
| குடிகுலம்புருவமூராம், | குடி | சாதி - புருவம் - ஊர் (௩) |
| கொடிவல்லிதுவசங்காக்கை. | கொடி | படர்கொடி - துகிற்கொடி - |
| | | காக்கை (௩) |
| 67—௬௭. | | ௨௫. |
| நட்டமேகடனக்கேடாம் | நட்டம் | கூத்து - கேடு (௨) |
| நகரென்பமனையுமூரும், | நகர் | வீடு - ஊர் (௨) |
| தொட்டலென்பதுவேயுண்ட [ர் | தொட்டல் | உண்டல் - தோண்டுதல்-கை |
| றோண்டல்கைதீண்டன்முப்பே | | யாற்றொடுதல் (௩) |
| தட்டலேதடைகிட்டற்பேர் | தட்டல் | தடுத்தல் - கிட்டுதல் (௨) |
| தையொருமாதம்பூசம், | தை | ஓர்மாதம் - பூசநக்ஷத்திரம் (௨) |
| கட்டலென்பதுதடுத்தல் | கட்டல் | தடுத்தல் - களைதல் - கட்டல்- |
| களைதல்பரித்தல்கள்ளல். | | திருடல். (௪) |
| 68—௬௮. | | ௨௬. |
| புட்கரநிறைவுபாண்ட [ம், | புட்கரம் | நிறைவு - பாண்டமுகம் - தீர்த் |
| மூகந்தீர்த்தம்புனல்வான்சேன | | தம் - நீர் - ஆகாயம்-பருந்து - |
| கட்கம்பங்கயமேயானைக் | | வாளாயுதம் - தாமரை - யா |
| கைநுனிகுருகீரைந்தாம், | | னைத்துதிக்கைநுனி - குருகெ |
| | | னு மோர்பறவை (௰) |
| வெட்சியென்பதுவெசெச்சை | வெட்சி | வெட்சிப்பூஞ்செடி- பகைவர் |
| மிகுநிரைகவர்தலென்ப | | பசுக்கூட்டத்தைக்கவர்தல் (௨) |
| பெட்பென்பபெருமையன்பாம் | பெட்பு | பெருமை - இஷ்டம் (௨) |
| பிரசந்தேன்மதுவண்டாமே. | பிரசம் | தேன் - கள் - வண்டு (௩) |
| 69—௬௯. | | ௨௭. |
| அடுதலேயட்டலென்ப | அடுதல் | தீயிற்பாகமாக்குதல் - நெருங் |
| வடர்தலுங்கொலையுமுப்பேர், | | கல் - கொல்லுதல் (௩) |
| சடிலமேநெருங்கலோடு | சடிலம் | நெருங்கல் - சடை - குதிரை (௩) |
| சடைகுதிரையுமுப்பேரே, | | |
| படலையேபடர்தன்மாலை | படலை | பரந்தவடிவு - பூமாலை - வாய |
| பதலையேவாசிக்கோவை, | | கன்றபறை - குதிரைக்கிண் |
| | | கிணிமாலை (௪) |
| கிடுகுதேர்மரச்சுற்றின்பேர் | கிடுகு | தேரின்மரச்சுற்று - கேடகம். (௨) |
| பரிசைக்குங்கிளத்தலாமே. | | |
| 70—௭0. | | ௨௮. |
| படலிகைபீர்க்குவட்டம் | படலிகை | பீர்க்கு - வட்டவடிவு - கைம் |
| பரக்குகைம்மணிபூத்தட்டாம் | | மணி - பூத்தட்டு (௪) |
| கொடியனேகொடியன்கேதாம் | கொடியான் | துன்மார்க்கன் - கேதுவெனு |
| | | ம் பாம்பு (௨) |
| குண்டாழந்தாழ்வாண்மாவே, | குண்டு | ஆழம்-தாழ்வு-ஆண்குதிரை (௩) |
| தொடுவென்பமருதப்பூமி | தொடு | மருதநிலம் - தோட்டம்-வஞ் |
| தோட்டங்கைதவமுப்பேரே, | | சம் (௩) |
| முடிமயிர்முடியேசென்னி | முடி | மயிர்முடி - தலை-கிரீடம். (௩) |
| மகுடமுமொழியலாமே. | | |
| 71—௭௧. | | ௨௯. |
| ஆடகந்துவரைபொன்னும் | ஆடகம் | துவரை - பொன் (௨) |

| | | |
|---|---|---|
| அஞரறிவிலரேதுக்கம், | அஞர் | அறிவிலார் - துயரம் (௨) |
| கோடகமுடியுறுப்புங் குதிரையும்புதுமையும்பேர், | கோடகம் | முடியுறுப்பு - குதிரை - புதுமை (௩) |
| பீடிகையாவணம்பூந் தட்டொடுபீடமும்பேர், | பீடிகை | கடைவீதி-பூந்தட்டு-ஆசனம் (௩) |
| தோடுபூவிதழேபெண்ணை மடல்போல்வ தொகுதிக் கும்பேர். | தோடு | பூவினிதழ் - பனையேடுபோல்வன - கூட்டம் (௩) |
| 72—௭௨. | | ௩௦. |
| அடரென்பநெருங்குதற்பே ரைம்மையின்வடிவுமாகும், | அடர் | நெருங்குதல் - அச்சவடிவு (௨) |
| விடர்முனியிருப்புத்தூர்த்தர் கமர்வெற்பின் முழைகாடைம்பேர், | விடர் | முனிவரிருப்பிடம்- தூர்த்தர்-வெடிப்பு - மலைப்பிளப்பு - காடு (௫) |
| விடலையேதலைவன்பேரும் விறலோன்றன்பேருமாகும் | விடலை | பாலைநிலத்தலைவன் - வெற்றியாளன் (௨) |
| அடிசெண்டுவெளிதாளாதி கவிதையின்பாதமாமே. | அடி | குதிரைவையாளிவீதி - கால் - முதல் - பாட்டினடி (௪) |

டகரவெதுகை முற்றிற்று.

## ௭ - வது. ணகரவெதுகை

| | | |
|---|---|---|
| 73—௭௩. | | ௧. |
| புணர்வுதோய்ந்திடலிசைப்பாம் | புணர்வு | கலவி - இசைப்பு (௨) |
| பொழில்புவிபெருமைசோலை, | பொழில் | பூமி - பெருமை - சோலை (௩) |
| உணர்வென்பதெளிவேயூட லொழிதலேயறிவுமாகும், | உணர்வு | தெளிவு - ஊடலொழிதல் - அறிவு (௩) |
| குணமென்பகயிறுபண்பு கும்பம்வின்ஞாணிநாற்பேர், | குணம் | கயிறு - குணம் - குடம் - வில்நாணி (௪) |
| கணமுடுநோய்திரட்சி காலநுட்பம்பேய்வட்டம். | கணம் | நக்ஷத்திரம் - ஓர்நோய் - கூட்டம் - காலநுட்பம் - பேய்-வட்டவடிவு (௬) |
| 74—௭௪. | | ௨. |
| ஆணமேகுழம்போடன்பாம் | ஆணம் | குழம்பு - இஷ்டம் (௨) |
| அலகாஞ்சிலமைவுமாமே, | அலம் | கலப்பை - அமையுமென்றல் (௨) |
| ஓணமாயோனாளாறும் | ஓணம் | திருவோணநக்ஷத்திரம் - நதி (௨) |
| ஊதியமிலாபங்கல்வி, | ஊதியம் | ஆதாயம் - வித்தை (௨) |
| காணமேபரியுண்செக்கோர் கண்ணல்பொற்காசுநாற்பேர், | காணம் | குதிரையுணவு - செக்கு - ஓர் கட்பிராணி - பொற்காசு (௪) |
| கோணலேமாறுபாடுங் கூனுமாம்வளைவுமாமே. | கோணல் | மாறுபாடு - கூன் - வளைவு (௩) |

| | | |
|---|---|---|
| **75—எரு.** | | ரு. |
| குணில்குறுந்தடிகடிப்பாம் | குணில் | குறுந்தடி - பறையடிக்கும் குறுந்தடி (உ) |
| குல்லையேதுளவுவெட்சி, | குல்லை | துளசி - வெட்சிப்பூஞ்செடி (உ) |
| மணிநவமணியேகன்டை வனப்பொடுகருமைநன்மை, | மணி | நவமணி - யானைமணி- அழகு- கறுப்பு - நன்மை (ரு) |
| துணிசோதிநாளேதுண்டம் | துணி | சோதிநக்ஷத்திரம் - துண்டம் (உ) |
| துளிமழைத்துளிபெண்ணுமை, | துளி [ம் | மழைத்துளி - பெண்ணுமை (உ) |
| பிணிமுகமயில்புட்பேராம் | பிணி முக | மயில் - பறவைப்பொது (உ) |
| பிசிதநீரிறைச்சிவேம்பு. | பிசிதம் | நீர் - இறைச்சி - வேம்பு (ரு) |
| **76—எசு** | | ச. |
| நாணிலச்சைப்பேர்தானே கயிறென்றுநாட்டலாகும், | நாண் | வெட்கம் - கயிறு (உ) |
| தோணியேசுடைநாள்வங்கந் தொடுகணைதெப்பஞ்சேறு, | தோணி | இரேவதிநக்ஷத்திரம் - மரக்கலம்-அம்பு-தெப்பம்-சேறு (ரு) |
| வாணியேயோர்கூத்தின்பேர் வாக்குநாமகளுமாமே, | வாணி | ஓர்கூத்து-சொல்-சரஸ்வதி (ரு) |
| ஏணியேயுலகோடெல்லை [லும். யிறைவைமா னென்றுஞ்சொல் | ஏணி | உலகம் - எல்லை - ஏணி-மான் (ச) |
| **77—எஎ.** | | ரு. |
| திணைநிலங்குலமொழுக்கம் | திணை | பூமி - சாதி - நன்னிலை (ரு) |
| செவியென்பகாதுகேள்வி, | செவி | காது - கேள்வி (உ) |
| பிணையாசை விலங்கின்பெண்பேர் | பிணை | ஆசை - பெண்மிருகம் (உ) |
| பிலவங்கங்குரங்குதேரை, | பில வங் கம் | குரங்கு - தேரை (உ) |
| கணையம்புதிரட்சியும்பேர் | கணை | அம்பு - திரண்டவடிவு (உ) |
| கட்சியேகாடுங்கூடும். | கட்சி | காடு - பறவைக்கூடு (உ) |
| பணைவயல்பரியின்பந்தி பருத்தல்வேயரசுபீடாம். | பணை | கழனி - குதிரைப்பந்தி-பருத்தல் - மூங்கில் - அரசமரம்- பெருமை (சு) |
| **78—எஅ.** | | சு. |
| யாணரேபுதுமைதச்ச ரெய்தியவனப்புநன்மை, | யாணர் | புதுமை - தச்சர் - அழகு - நன்மை (ச) |
| பாணந்தான்மேகவண்ணக் குறிஞ்சியெய்கணைபூம்பட்டாம் | பாணம் | மழைவண்ணக்குறிஞ்சி - அம்பு-பட்டுவஸ்திரம் (ரு) |
| சேணெனப்படுமகலநீளஞ் செப்பிடிலுயரமும்பேர், | சேண் | அகலம்-நீளம்-உயரம் (ரு) |
| ஆணைமெய்யுடனேவென்றி சூளேவலாகநாற்பேர். | ஆணை | உண்மை - வெற்றி - சபதம் - ஏவல் (ச) |
| **79—எகூ.** | | எ. |
| அண்டமாகாயமுட்டை | அண்டம் | ஆகாயம் - முட்டை (உ) |
| அயிலென்பவேலேகூர்மை, | அயில் | வேலாயுதம் - கூர்மை (உ) |
| துண்டமேசாரைப்பாம்பு துணியொடுவதனமூக்காம், | துண்டம் | சாரைப்பாம்பு - துண்டம் - முகம் - மூக்கு (ச) |
| கண்டமேகவசம்வெல்லங் கழுத்திடுதிரைவாடுண்டம், | கண்டம் | கவசம்-வெல்லம்-கழுத்து-திரைச்சீலை-வாளாயுதம்-துண்டம் () |

| | | |
|---|---|---|
| முண்டகந்தாழைகள்ளு<br>முளரிமுத்தகமுண்மூலம். | முண்டகம். | தாழை - கள் - தாமரை - நெற்றி-முட்செடி (ரு) |
| 80—அo. | | அ. |
| அண்டரேபகைவர்வானே<br>ராயரென்றுகுமுப்பேர், | அண்டர் | பகைஞர் - தேவர் - இடையர் (ங) |
| சண்டனேசதயநாளுஞ்<br>சூறனும்வேறுகாட்டும், | சண்டன் | சதயநக்ஷத்திரம் - மூஞ்சூறு (உ) |
| கண்டல்தாழைமுள்ளிப்பேர் | கண்டல் | தாழை - முள்ளிச்செடி (உ) |
| கரைதலேவிளித்தலோசை, | கரைதல் | அழைத்தல் - சத்தம் (உ) |
| பண்டம்பொன்பணிகாரப்பேர் | பண்டம் | பொன் - பலபண்டம் (உ) |
| பாகுபால்குழம்புபாக்காம். | பாகு | பங்கு - குழம்பு - பாக்கு (ங) |
| 81—அக. | | க. |
| விண்டென்பமாயோன்வெற்பு<br>மேகமேமூங்கில்காற்றாம், [ன் | விண்டு | திருமால் - மலை - மேகம் - மூங்கில் - காற்று (ரு) |
| தொண்டென்பபழமையொன்பா<br>னெழும்பொடுவழிபாடாமே, | தொண்டு | பழமை - ஒன்பது - அடிமை - வழிபடுதல் (ச) |
| தண்டென்பகுழாயேவீணை<br>தடிபடைமிதுனமோந்தி, | தண்டு | தொளையுடைப் பொருள் - வீணை - தடி - சேனை - மிதுனவிராசி - ஓணான் (சு) |
| வண்டென்பசங்குகுற்றம்<br>வளையளிவாளியைம்பேர். | வண்டு | சங்கு - குற்றம் - கைவளை - வண்டு - அம்பு (ரு) |
| 82—அஉ. | | கா. |
| உண்டையேதிரளையாகு<br>முறுபடைவகுப்புமென்ப, | உண்டை | திரண்டவடிவு-படைவகுப்பு (உ) |
| தொண்டையாதொண்டைகொ<br>வ்வை<br>தூங்கும்யானைத்துதிக்கை, | தொண்டை | ஆதொண்டைச்செடி - கோவைக்கொடி - யானைத்துதிக்கை (ங) |
| கொண்டையேமயிர்முடிக்கு [ம்<br>மிலந்தையின்கனிக்குங்கூற்று | கொண்டை | மயிர்முடி - இலந்தைப்பழம் (உ) |
| கண்டிகைபதக்கம்வாகு<br>வலயமேகலன்பெய்செப்பு. | கண்டிகை | பதக்கம் - தோளணி - ஆபரணச் செப்பு. (ங) |
| 83—அங. | | கக. |
| தண்ணமோர்கட்பறைப்பேர்<br>தரித்திடுமழுவுமாகும், | தண்ணம் | ஓர்கட்பறை - பரசாயுதம் (உ) |
| வண்ணமேசந்தம்பண்பாம் | வண்ணம் | அழகு - நிறம் - குணம் (ங) |
| மறையிராசியமேவேதம், | மறை | மறைவு - வேதம் (உ) |
| பண்ணெனப்பாட்டும்பண்ணும்<br>பரிமாவின்கலனையும்பேர், | பண் | இசைப்பாட்டு - பண் - குதிரைச்சேணம் (ங) |
| மண்ணணுவொப்பனைப்பேர்<br>முழவின்மார்ச்சனையுமாமே. | மண் | அணு - அலங்காரம் - மத்தளத்திற்பூசுமண். (ங) |
| 84—அச. | | கஉ. |
| அணங்குநோயழகுதெய்வ<br>மாசைபெண்கொலைவருத்தம், | அணங்கு | வியாதி - அழகு-தெய்வம்-ஆசை-பெண்-கொல்லுதல்-பிரயாசம் |
| துணங்கையேவிழாப்பேய்க்கூத்<br>தாமாதிரைநாளுஞ்சொல்லும், | துணங்கை | திருவிழா - பேய்க்கூத்து - திருவாதிரை நக்ஷத்திரம் (ங) |

| | | |
|---|---|---|
| குணுங்கர்தோற்கருவிமாக்கள் குயிலுவரிழிஞர்முப்பேர், | குணுங்கர் | தோற்கருவியாளர் - நரம்பி ஞகிய கருவிக்குரியோர் - சண்டாளர் (ங) |
| துணங்கறலிருள்விழாவாம் | துணங் கறல் | இருள் - திருவிழா (உ) |
| தோன்றலேசுதனுந்தன்பேர். | தோன் றல் | மகன் - அரசன் (உ) |
| 85—அரு. | | கரு. |
| புணரியேவாரிநீரிற் பொருதிரை கரைமுப்பேராம், | புணரி | கடல் - அலை - கரை (ங) |
| பணிலமேசலஞ்சமஞ்சங் இருபெயர்பகரலாமே, | பணிலம் | வலம்புரியாயிரஞ் சூழ்ந்தசங் கு - சங்கு (உ) |
| கணிவேங்கைமரமதாகுங் கழனிசூழ்மருதமும்பேர், | கணி | வேங்கைமரம் - மருதநிலம் (உ) |
| பணியேதோற்கருவிவார்த்தை பாம்புசெய்தொழிலுமாமே. | பணி | தோற்கருவி - சொல்-பாம்பு- தொழில் (ச) |
| 86—அசு. | | கசு. |
| பாணியூர்நீர்கையோசை பற்றுக்கால்போதுகாடு, சேனுறுசோலைபண்டஞ் சிறந்தபல்லியம்பன்னென்றும் | பாணி | ஊர் - நீர் - கை - சத்தம்- அன்பு - காடு-காலம்-காடு- சோலை - பலபண்டம்-வாச் சியப்பொது (கக) |
| தாணுவேசயிலங்குற்றி சங்கரனிலைதூணம்பேர், | தாணு | மலை-குற்றி - சிவன் - நிலைபெ றுதல் - தூண் (ரு) |
| வேணியேசடைவிசும்பாம் | வேணி | மயிர்ச்சடை - ஆகாயம் (உ) |
| வியாளமேபுலியும்பாம்பும். | வியாளம் | புலி - பாம்பு (உ) |
| 87—அஎ. | | கரு. |
| குண்டலங்குழைவிசும்பாம் | குண்டலம் | குண்டலம் - ஆகாயம் (உ) |
| குபேரனேதனதன்சோமன், | குபேரன் | குபேரன் - சந்திரன் (உ) |
| மண்டிலம்பரியூர்வட்டம் | மண்டிலம் | குதிரை - ஊர் - வட்டம் (ங) |
| மந்தியேயூகம்வண்டு, | மந்தி | பெண்குரங்கு - வண்டு (உ) |
| கொண்டலேமுகில்கீழ்காற்றும் | கொண்டல் | மேகம் - கீழ்காற்று (உ) |
| கோட்டியேவாயில்கூட்டம், | கோட்டி | வாயில் - கூட்டம் (உ) |
| மண்டலிபூனைபாம்பு மண்ணுநாயுமாமே. | மண்டலி | பூனை - பாம்பு - பூமி - நாய் (ச) |
| 88—அஅ. | | கசு. |
| புண்டரீகந்திக்காளை புலிவண்டுகழுகுகஞ்சம், | புண்டரீகம் | தென்கீழ்த்திசை யானை-புலி- வண்டு - கழுகு - தாமரை (ரு) |
| தண்டமேயானைசெல்லும் வழிதண்டாயுதங்குடைக்கால் | தண்டம் | யானை செல்லும்வழி-தண்டா யுதம் - குடைக்காம்பு (ங) |
| பிண்டிநென்மாவசோகாம் | பிண்டி | நென்மா - அசோகமரம் (உ) |
| பிதாசிவன்பிரமனுரை, | பிதா | சிவன் - பிரமன் - நாரை (ங) |
| கண்டகஞ்சுரிகைமுள்வாள் | கண்டகம் | உடைவாள் - முள்-வாளாயுதம் () |
| களவென்பகளாச்சோரப்பேர். | களவு | களாச்செடி - திருட்டு (உ) |

| | | |
|---|---|---|
| 89—௮௯. | | ௧௭. |
| பண்ணவன்முனிவன்றேவன் பகர்குருவருகனும்பேர், | பண்ணவன் | முனிவன் - தேவன் - குரு - அருகன் (௪) |
| தண்ணடைமருதஞ்சாரூர் நாடெனவிருபேர்சாற்றும், | தண்ணடை | மருதநிலத்தூர் - நாடு (௨) |
| வண்மையேவழங்கல்வாய்மை வளம்புகழ்வலியாமென்ப, | வண்மை | கொடுத்தல் - உண்மை - வளமை - புகழ் - வலிமை (௫) |
| ஒண்மையேமிகுதிநன்மை யொழுங்கறிவழகைம்பேரே. | ஒண்மை | மிகுதி - நன்மை - ஒழுங்கு - அறிவு - அழகு (௫) |
| 90—௯0. | | ௧௮. |
| எண்ணெனபதெள்ளிலக்க மெளிமைசோதிடம்விசாரம், | எண் | எள்-இலக்கம்-எளிமை - சோதிடநூல் - ஆலோசனை (௫) |
| கண்ணிடங்கணுவேய்கன்னும் | கண் | இடம் - மரக்கணு - மூங்கில் - கல் (௪) |
| காஞ்சிமேகலையோர்பண்ணும், | காஞ்சி | மாதரிடையணியு ளேழுகோவை - ஓர்பண் (௨) |
| விண்முகில்சுவர்க்கம்வானும் | விண் | மேகம்-தேவலோகம்-ஆகாயம் () |
| விபுலம்பார்விரிவுபீடு | விபுலம் | பூமி - அகலம் - பெருமை (௩) |
| பண்ணையேவயனீர்த்தாழ்வு மருதமாத்துயிலும்பாழி. | பண்ணை | கழனி - குளம்-மருதநிலம்-விலங்கின் படுக்கையிடம் (௪) |
| 91—௯௧. | | ௧௯. |
| காண்டமேதிரைகாடம்பு கமண்டலங்கலன்பெய்செப்பு, நீண்டகோல்முடிவுதாசு நீர்படைக்கலமீரைந்தாம், | காண்டம் | திரைச்சீலை-காடு-அம்பு - கமண்டலம் - ஆபரணம்வைக்குஞ் செப்பு - கோல் - முடிவு - வஸ்திரம் - நீர் - ஆயுதம் (௧0) |
| பாண்டிலேறூர்திவட்டம் பணைகட்டில்விளக்குத்தாளம் | பாண்டில் | எருது-வாகனம்-வட்டவடிவு-மூங்கில் - கட்டில் - விளக்கு - தாளம் (௭) |
| ஈண்டெனபதிவ்விடத்தோ டிப்படிசடிதியும்பேர். | ஈண்டு | இவ்விடம் - இவ்வண்ணம் - சீக்கிரம் (௩) |
| 92—௯௨. | | ௨0. |
| அண்டசமுதலையோந்தி யரணைபுள்ளுடும்புபல்லி, நண்டுமீன்றவளையாமை நாகமிப்பியுமீராறும், | அண்டசம் | முதலை-ஓந்தி - அரணை-பறவை-உடும்பு - பல்லி - நண்டு - மீன் - தவளை-ஆமை-பாம்பு-இப்பி () |
| சண்டன்கூற்றலிவெய்யோனும் | சண்டன் | இயமன் - பேடி - சூரியன் (௩) |
| தாள்கதவுறுதாள்பாதம், | தாள் | தாழ்ப்பாள் - பாதம் (௨) |
| சுண்டையேசுண்டைகள்ளாம் | சுண்டை | சுண்டைச்செடி-கள் (௨) |
| சொர்க்கமேசுவர்க்கங்கொங்கை. | சொர்க்கம் | தேவலோகம் - முலை (௨) |
| 93—௯௩. | | ௨௧. |
| பணமென்பதரவின்பையும் பாம்பும்பொற்காசும்பேர், | பணம் | பாம்பின்படம் - பாம்பு - பொற்காசு (௩) |
| மணமென்பவாசங்கூட்டம் வதுவையுமாகுமென்ப, | மணம் | வாசனை - கூட்டம் - கலியாணம் (௩) |
| பணவையேபரணும்பேயும் | பணவை | பரண் - பிசாசம் (௨) |

| | | | |
|---|---|---|---|
| பையுளேசிறுமைநோயாம், | பையுள் | அற்பம் - வியாதி | (உ) |
| நுணவையென்ஞேலபின்டி | நுணவை | எண்ணெலை - மா | (உ) |
| நுனியென்பநுனிநுண்மைப் பேர். | நுனி | கூர்மை - நுட்பம் | (உ) |

ணகரவெதுகை முற்றிற்று.

---

## ௭ - வது. தகரவெதுகை.

| | | | |
|---|---|---|---|
| 94—கூச. | | க. | |
| மதலையேகொன்றைபிள்ளை மரக்கலங்கொடுங்கை தூணும், | மதலை | கொன்றைமரம்-மகன்-மரக்கலம்-கொடுங்கை-தூண் | (ரு) |
| சிதலைநோய்துணிசெல்லென்ப | சிதலை | வியாதி - சீலைத்துணி - கறையான் | (ந) |
| சீதநீர்குளிரேமேகம், | சீதம் | நீர் - குளிர்ச்சி - மேகம் | (ந) |
| பதலையோர்கட்பறைப்பேர் பருவரைதாழிக்கும்பேர், | பதலை | ஒருகட்பறை - மலை - சாடி | (ந) |
| கதலியேவாழைதேறு காற்றுடிதுவசமாம்பேர். | கதலி | வாழை - தேற்றுமரம் - காற்றுடி - விருதுக்கொடி | (ச) |
| 95—கரு. | | உ. | |
| இதழ்பனையேடுபூவி னிதழுதடெனவிம்முப்பேர், | இதழ் | பனையேடு-பூவிதழ்-உதடு | (ந) |
| கதழ்வுவேகஞ்சிறப்பாம் | கதழ்வு | சீக்கிரம் - சிறப்பு | (உ) |
| களிசெருக்கொடுகுழும்பு, | களி | களிப்பு - குழம்பு | (உ) |
| மதுகமேயிருப்பையெட்டி மதுரமார்த்ராவுமாமே, | மதுகம் | இருப்பைமரம் - எட்டிமரம் - தித்திப்பு - பொன்முதலிய வெழுவகைலோகத்தொன்று | (ச) |
| சிதடனந்தகன்மூடன்பேர் | சிதடன் | குருடன் - மூடன் | (உ) |
| திதிபக்கநிலைபேறும்பேர். | திதி | பிரதமைமுதலியதிதி - நிலைபெறுதல் | (உ) |
| 96—கசு. | | ந. | |
| ஆதனாருயிரோரறிவில்லான் | ஆதன் | உயிர் - அறிவில்லான் | (உ) |
| அங்கியென்பதுதீச்சட்டை, | அங்கி | நெருப்பு - சட்டை | (உ) |
| போதகம்யானைக்கன்று போற்றியவிளமைக்கும்பேர், | போதகம் | யானைக்கன்று-இளையதன்மை | (உ) |
| ஏதந்துன்பங்குற்றப்பேர் | ஏதம் | துன்பம் - குற்றம் | (உ) |
| ஈமமேமயானங்காட்டம், | ஈமம் | சுடுகாடு-விறகு | (உ) |
| சூதன்றேர்ப்பாகன்சூதன் | சூதன் | தேர்ப்பாகன்-சூதாடுவோன் | (உ) |
| சுவேதமேவேர்வுவெண்மை. | சுவேதம் | வேர்வை - வெண்மை | (உ) |
| 97—கஎ. | | ச. | |
| சூதமாமரமேவண்டு சூதுடனிரதந்தோன்றல், | சூதம் | மாமரம் - வண்டு - சூது - இரசம்-பிறப்பு | (ரு) |
| சூதகமேயாசூசந் தோகைமார்தோயாப்பூப்பாம் | சூதகம் | அசுத்தம்-மகளிர்துடக்கு | (உ) |

| | | |
|---|---|---|
| பூதமாலிறந்தகாலம் புனிதமைம்பூதஞ்சீவன், | பூதம் | ஆலமரம் - இறந்தகாலம் - சுத்தம் - பிருதிவிமுதலிய வைம்பூதம் - உயிர் (௫) |
| மாதவந்தவம்வசந்தம் | மாதவம் | தவம் - வசந்தகாலம் (௨) |
| வாதமேதர்க்கங்காற்றும். | வாதம் | தருக்கம் - காற்று (௨) |
| 98—௯௮. | | ௫. |
| மதன்வலிவேள்வனப்பாம் | மதன் | வலிமை - மன்மதன் - அழகு (௩) |
| வலித்தலேவலித்தல்பேசல், | வலித்தல் | வலித்தல் - பேசல் (௨) |
| பதங்கம்புட்பொதுவிட்டிற்பேர் | பதங்கம் | பறவைப்பொது - விட்டிற்பறவை (௨) |
| பலிபூசைபிச்சைநீறும், | பலி | பூசை - பிச்சை - நீறு (௩) |
| சிதம்விண்மீன்ஞானம்வெள்ளை செயமுறப்பட்டதாமே, | சிதம் | நட்சத்திரம் - ஞானம் - வெண்மை - சயமுறப்படுதல் (௪) |
| நிதம்பமேயல்குலென்ப நெடுமலைப்பக்கமும்பேர். | நிதம்பம் | அல்குல் - மலைப்பக்கம் (௨) |
| 99 — ௯௯. | | ௬. |
| சதியுரோகணிதற்பாட்டி வஞ்சனைதாளவொத்து, | சதி | உரோகிணிநட்சத்திரம் - கற்புடைமகள் - கபடம் - தாளவொத்து. (௪) |
| விதியென்பவினையயன்பேர் | விதி | தொழில் - பிரமன் (௨) |
| வேட்டுவன்மகநாள்வேடன், | வேட்டுவன் | மகநட்சத்திரம் - வேடன் (௨) |
| பதியிறைகேள்வனூராம் | பதி | அரசன் - நாயகன் - ஊர் (௩) |
| பதுக்கையேபாறைதுறு, | பதுக்கை | பாறை - சிறுதுறு (௨) |
| பிதிர்கதைநொடிதூவற்பேர் | பிதிர் | கதை - கைநொடி - தூவல் (௩) |
| பிண்டமேதிரளைபிச்சை. | பிண்டம் | திரட்சி - பிச்சை (௨) |
| 100—௧00. | | எ. |
| ஆதியேமுதனேரோட லருகன்மாலீசன்வேதன், | ஆதி | முதல் - நேரோடல் - அருகன் - திருமால் - சிவன் - பிரமன் (௬) |
| பூதியம்புவியுடற்பேர் | பூதியம் | பூமி - சரீரம் (௨) |
| பொம்மலேபொலிவுஞ்சோறும், | பொம்மல் | மங்கலம் - சோறு (௨) |
| பாதிரிபாடலப்பேர் பணைத்தெழுமூங்கிற்கும்பேர், | பாதிரி | பாதிரிமரம் - மூங்கில் (௨) |
| ஏதியாயுதம்வாளென்ப | ஏதி | ஆயுதம் - வாளாயுதம் (௨) |
| இழைநூலாபரணமாமே, | இழை | நூல் - ஆபரணம் (௨) |
| 101—௧0௧. | | அ. |
| சாதியேபிரம்புகள்ளோர் தருசிறுசண்பகப்பேர், | சாதி | பிரம்பு - கள் - தேக்கமரம் - சிறு சண்பகம் (௪) |
| போதஞானந்தோணிப்பேர் | போதம் | ஞானம் - மரக்கலம் (௨) |
| புகல்குதிருடல்சொல்வெற்றி, | புகல் | தானியக்குதிர் - சரீரம் - சொல் - வென்றி (௪) |
| ஓதிபெண்மயிரேபூனை யோந்திமெய்ஞ்ஞானம்வெற்பாம் | ஓதி | கூந்தல் - பூனை - ஓணன் - ஞானம் - மலை (௫) |
| ஓதிமமன்னம்வெற்பாம் | ஓதிமம் | அன்னப்பட்சி - மலை (௨) |
| உருத்தலேதோற்றல்கோபம். | உருத்தல் | முளைத்தல் - கோபம் (௨) |

| | | |
|---|---|---|
| 102—க0உ. | | கூ. |
| சுதைமகள்கறவாத்தேனு சுண்ணச்சாந்தமூதநாற்பேர், | சுதை | மகள் - உதைகாற்பசு - சுண்ணச்சாந்து - அமிர்தம் (ச) |
| புதையென்பகணையின்கட்டும் புதுமையுமறைவுமூப்பேர், | புதை | அம்பின்கட்டு - புதுமை - மறைவு (ங) |
| மதுவென்பகறவுந்தேனும் வசந்தகாலமுமாமென்ப, | மது | கள் - தேன்-வசந்தகாலம் (ங) |
| கதைதண்டாயுதமேவார்த்தை காரணமும்மூப்பேரே. | கதை | தண்டாயுதம் - சொல் - காரணம் (ங) |
| 103—க0ங. | | க0. |
| சீதையேபொன்னுங்காணி படைச்சால்சீராமன்றேவி, | சீதை | பொன்னுங்காணி - உழுபடைச்சால் - சீதாதேவி (ங) |
| மேதைதோல்புதனிறைச்சி மிக்கபேரறிவுகள்ளாம், | மேதை | தோல் - புதன்-இறைச்சி-பேரறிவு - கள் (ரு) |
| கோதைமுன்கைத்தோற்கட்டே குழலூர்காற்றொழுங்குசேரன், | கோதை | முன்கைத்தோற்கட்டு - பெண்மயிர்-பூமாலை - காற்று - ஒழுங்கு - சேரன் (சு) |
| ஓதைபேரொலிமதிற்பேர் | ஓதை | ஆரவாரம் - மதில் (உ) |
| உக்கந்தீயிடையானேறு. | உக்கம் | நெருப்பு-இடை-பசு-எருது (ச) |
| 104—க0ச. | | கக. |
| அத்தம்பொன்பாதிகைகண்ணுடிசொற்பொருள்காடோர்நாள் | அத்தம் | பொன்-பாதி-கை-கண்ணுடி - சொற்பொருள் - காடு - ஓர் நட்சத்திரம் (எ) |
| புத்தகங்கோசமெய்ப சித்திரப்படாமுமாமே, | புத்தகம் | எழுதுபுத்தகம் - எழுத்துச்சீலை (உ) |
| நத்தமேயிருளுமூரு நந்துடனிரவுநாற்பேர், | நத்தம் | இருள் - ஊர் - சங்கு-இராத்திரி (ச) |
| துத்தம்யாழிசைநாய்பாலே வயிறுகண்மருந்துஞ்சொல்லும் | துத்தம் | யாழிலோர்நரம்பு - நாய் - பால் - வயிறு - கண்மருந்து (ரு) |
| 105—க0ரு. | | கஉ. |
| அத்தென்பவரைஞாண்செம்மையசைச்சொலோடிசைப்பு நாற்பேர் | அத்து | அரைநாண் - சிவப்பு - அசைச்சொல் - கூடிநிற்றல் (ச) |
| தொத்துப்பூங் கொத்துத்தொண்டாம் | தொத்து | பூங்கொத்து - அடிமை (உ) |
| தூம்புவேய்தொளைமரக்கால், | தூம்பு | மூங்கில் - உட்டொளைப்பொருள் - மரக்கால் (ங) |
| தத்தைமூத்தாள்கிளிக்காம் | தத்தை | அக்காள் - கிளி (உ) |
| தழல்கிளிகடிகோல்செந்தீ, | தழல் | கிளிகடிகோல்-நெருப்பு (உ) |
| உத்தரமூழித்தீமே லொடுமெறுமொழிவடக்கே. | உத்தரம் | வடவாமுகாக்கினி-மேல்-எதிர்மொழி-வடக்கு (ச) |
| 106—க0சு. | | கங. |
| கூத்தனேயுயிர்நடன்பேர் | கூத்தன் | உயிர் - நாடகன் (உ) |
| குலங்குடிகோயில்கூட்டம், | குலம் | சாதி-அரசன்மனை-கூட்டம் (ங) |
| ஊழ்த்தலேசினைத்தல்செவ்வியுறுபதனழிவுமூப்பேர், | ஊழ்த்தல் | நினைத்தல்-பதம்-பதனழிவு (ங) |

| | | |
|---|---|---|
| பாத்தென்பகஞ்சிசோறு<br>பகுத்திடல்வகுத்தமுப்பேர், | பாத்து | கஞ்சி - சோறு - பங்கிடல் (௩) |
| தீர்த்தமேவிழாவுநீரும் | தீர்த்தம் | திருவிழா - நீர் (௨) |
| தீர்த்தனேயருகனுசான். | தீர்த்தன் | அருகன் - குரு. (௨) |
| 107—கOஎ. | | கச. |
| குத்திமண்ணடக்கமென்ப | குத்தி | பூமி - அடக்கம் (௨) |
| கோணம்வாள்குதிரைமூக்காம், | கோணம் | வாளாயுதம் - குதிரை-மூக்கு (௩) |
| பத்தியேமுறையொழுக்கம்<br>பகர்வழிபாடுமுப்பேர், | பத்தி | முறைமை - நன்னிலை - வழிபடுதல் (௩) |
| அத்தியார்கலியேயானை<br>யதவெலும்பாகமாற்பேர், | அத்தி | சமுத்திரம் - யானை - அத்திமரம் - எலும்பு (௪) |
| சத்தியஞ்சபதமெய்யாம் | சத்தியம் | சபதம் - உண்மை (௨) |
| தபுதலேசாவுங்கேடும். | தபுதல் | சாதல் - கெடுதல். (௨) |
| 108—கOஅ. | | கரு |
| பித்திகைகருமுகைக்குப்<br>பெயர்சுவர்த்தலமுமாகும் | பித்திகை | சிறுசண்பகம் - சுவர்த்தலம் (௨) |
| கத்திகைதொடைவிகற்பந்<br>துவசமேகமழ்வாசந்தி, | கத்திகை | மாலையின்வேறுபாடு - துகிற்கொடி - குருக்கத்திக்கொடி (௩) |
| உத்திசெந்திருவுறுப்புச்<br>சுணங்குரையாடன்முப்பேர், | உத்தி | திருவுறுப்பெனுந்தலைக்கோலம் - தேமல் - உரைத்தல் (௩) |
| துத்தியேசுணங்குபாம்பின்<br>சுடர்ப்பொறிபுதலொன்றுமே. | துத்தி | தேமல் - பாம்பின்படப்பொறி - ஓர்செடி (௩) |
| 109—கOகூ. | | கசா. |
| சித்திரபானுசெந்தீ<br>திவாகரனாண்டொன்றின்பேர் | சித்திரபானு | நெருப்பு - சூரியன் - ஓர்வருடம் (௩) |
| பத்திரமிலைவனப்புப்<br>படைநன்மைசிறகேபாணம், | பத்திரம் | இலை - அழகு - ஆயுதம் - நன்மை - பறவையினிறகு - அம்பு (௬) |
| சித்திரமழகோர்பாடல்<br>சிறந்தவிம்மிதமேரண்டம், | சித்திரம் | அழகு - ஓர்கவி - அதிசயம் - ஆமணக்கு (௪) |
| சத்திரங்குடையேயன்ன<br>சாலைகைவிடாவேல்வேள்வி. | சத்திரம் | குடை - அன்னசத்திரம் - கைவிடாவேல் - யாகம். (௪) |
| 110—ககO. | | கஎ. |
| காத்திரங்கனமெய்சீற்றங்<br>களிற்றின்முற்காலேகிரி, | காத்திரம் | கனம் - உடல் - கோபம் - யானை முன்கால் - கிரி (௫) |
| நேத்திரங்கண்பட்டாடை | நேத்திரம் | கண் - பட்டுவஸ்திரம் (௨) |
| நீலியேகருமைதுர்க்கை | நீலி | கறுப்பு - துர்க்கை (௨) |
| கோத்திரம்புடவிதானே<br>குலமொடுமலையுமாமே, | கோத்திரம் | பூமி - குலம் - மலை (௩) |
| பாத்தியேசிறுசெய்யில்லம்<br>பகுத்தலும்வகுத்தநாமம். | பாத்தி | சிறுவயல் - வீடு - பாகுபாடு (௩) |
| 111—ககக. | | கஅ. |
| சதமிலையிறகோரெண்ணும் | சதம் | இலை - இறகு - ஓரெண் (௩) |
| சத்தமேயோசையேழாம், | சத்தம் | ஒலி - ஏழு (௨) |
| கதவமேகதவுகாப்பாம் | கதவம் | கதவு - காவல் (௨) |
| கழங்குபேய்கடங்கழற்சி, | கழங்கு | பேய்க்கூத்து - கழற்காய் (௨) |

| | | |
|---|---|---|
| பதமூரலின்பஞ்செவ்வி பதவிதாள்வரிசைவார்த்தை, | பதம் | சோறு-இன்பம்-காலம்-வழி - பாதம் - வரிசை - சொல் (எ) |
| மதியேமுன்னிலையசைச்சொன் மாதமம்புலிபுத்திப்பேர் | மதி | முன்னிலை யசைச்சொல் - மாதம்-சந்திரன் - புத்தி (௪) |
| 112—கக௨. | | ௧௯. |
| பீதகஞ்சாந்துபொன்மை பெருந்தனமிருவேலிப்பேர், | பீதகம் | நால்வகைச் சாந்திலொன்று - பொன்னிறம் - செம்பொன் - வெட்டிவேர் (௪) |
| சாதகம்வானம்பாடி சனனம்பாரிடமும்பேரே | சாதகம் | வானம்பாடி - பிறப்பு பூதம் (௩) |
| சேதகஞ்சேறுசெம்மை | சேதகம் | சேறு - சிவப்பு (௨) |
| தேயந்தானுடம்புநாடாம், | தேயம் | சரீரம் - நாடு (௨) |
| மாதரேயிடைச்சொல்காதல் வனப்பொடுமகளிராமே. | மாதர் | இடைச்சொல் - ஆசை - அழகு - பெணகள். (௪) |
| 113—கக௩. | | ௨௰. |
| சோதிமாலருகன்பானு சுடர்விளக்கீசனோர்நாள், | சோதி | திருமால் - அருகன் - சூரியன் - ஒளி - தீபம் - சிவன் - ஓர் நட்சத்திரம் (எ) |
| பூதியேநரகஞ்செல்வந் தூர்க்கந்தம்புழுதிநீறும், | பூதி | நரகம் - செல்வம் - தீநாற்றம் - புழுதி - விபூதி (௫) |
| வீதியேதெருநேரோடல் | வீதி | தெரு - நேரோடல் (௨) |
| மேலெனபதிடம்விண்மேற்காம், | மேல் | இடம் - ஆகாயம் - மேற்கு (௩) |
| மாதிரந்திசையாகாய மலையானைநிலமைம்பேரே. | மாதிரம் | திக்கு - ஆகாயம் - மலை-யானை - பூமி. (௫) |
| 114—கக௪. | | ௨௧. |
| தாதுபொன்முதலாமேழுஞ் சடமுறுதாதோரேழும் பூதமோரைந்துங்காவிக் கல்லுடன்புகலுநாற்பேர், | தாது | பொன்முதலிய வெழுவகைலோகம் - உடலிற்றோன்றிய விரத முதலிய எழுவகைத்தாது - மண்முதலிய ஐவகைப்பூதம் - காவிக்கல் (௪) |
| வேதிகைபலகைதிண்ணை | வேதிகை | கேடகம் - திண்ணை (௨) |
| வேதிரென்பசெவிடுவேணு, | வேதிர் | செவிடு - மூங்கில் (௨) |
| கேதுவேசிகிடதாகை | கேது | ஓர்கோள் - துகிற்கொடி (௨) |
| கிள்ளைதான்குதிரைதத்தை. | கிள்ளை | குதிரை - கிளி (௨) |
| 115—கக௫. | | ௨௨. |
| கதுப்பேயாண் மயிரும்பெண்பான் மயிரொடுகவுளுமுப்பேர், | கதுப்பு | மைந்தர்மயிர் - பெண்மயிர் - கபோலம் (௩) |
| விதப்பேகம்பிதமிக்காகும் | விதப்பு | நடுக்கம் - மிகுதி (௨) |
| வித்தம்பொன்பழிப்புஞானம், | வித்தம் | பொன் - இகழ்வு - ஞானம் (௩) |
| அதிர்ப்பொலிநடுக்கமென்ப | அதிர்ப்பு | சத்தம் - நடுக்கம் (௨) |
| அகப்பாவேபுரிசைமேடை, | அகப்பா | மதில் - மதிலுண்மேடை (௨) |
| ஒதுக்கமேநடைமறைப்பாம் | ஒதுக்கம் | நடை - மறைப்பு (௨) |
| ஒருத்தலாண்விலங்குவேழம். | ஒருத்தல் | ஆண்மிருகம் - யானை (௨) |
| 116—கக௬. | | ௨௩. |
| பத்திரிபறவைகாளி பரியிலைபாணமைம்பேர், | பத்திரி | பட்சி - காளி - குதிரை - இலை - அம்பு (௫) |

| | | |
|---|---|---|
| அத்திரிகழுதைவிண்ணொட் | அத்திரி | கழுதை-ஆகாயம் - ஒட்டகம்- |
| டகம்பரியசலமம்பாம், | | குதிரை-மலை-பாணம் (சு) |
| சத்தியேயுமைவேல்காஎறல் | சத்தி | பார்வதி - வேலாயுதம் - கக்கல் - |
| குடைவலிதுவசந்தாகும், | | குடை-வலிமை-துகிற்கொடி.() |
| சுத்தியேயகல்வெண்சங்கஞ் | சுத்தி | அகல்-சங்கு-சுசி-ஓர்கருவி (ச) |
| சுத்தமோர்கருவிக்கும்பேர். | | |
| 117—கக௭. | | உச. |
| புத்தன்மாலருகன்சாந்தன் | புத்தன் | திருமால்-அருகன்-புத்தன் (௩) |
| பூழிருனகில்பூமிப்பேர், | பூழில் | அகில் - பூமி (உ) |
| புத்தேளோபுதுமைதேவாம் | புத்தேள் | புதுமை - தெய்வம் (உ) |
| பூட்கைதோனமேற்கோள்யாளி, | பூட்கை | யானை-மேன்மை-யாளி (௩) |
| தைத்தலுன்னங்கைத்தற்பேர் | தைத்தல் | துணிமுதலியதைத்தல் - அல |
| | | ங்கரித்தல் (உ) |
| சாறுகள்விழவுதாரும், | சாறு | கள் - திருவிழா - மரக்குலை (௩) |
| மூத்தமேபிரியமோட்ட | மூத்தம் | பிரீதி - உதடு - மருதநிலம் - |
| மருதநன்னிலமுத்தாமே. | | முத்து (ச) |
| 118—கக௮. | | உரு. |
| அத்தனேமூத்தோன்றந்தை | அத்தன் | மூத்தோன் - பிதா - சிவன் - |
| யரனொடுகுருவுநாற்பேர், | | குரு (ச) |
| சித்தமேதிடமுள்ளப்பேர் | சித்தம் | மெய் - மனம் (உ) |
| சேகரந்தலைமாவேராம், | சேகரம் | தலை - மாமரம் - அழகு (௩) |
| கைத்தலேசினங்கைப்பாகும் | கைத்தல் | கோபம் - கசப்பு (உ) |
| கஞறலேபொலிவுகன்றல், | கஞறல் | மங்கலம் - சினக்குறிப்பு (உ) |
| சித்தென்பசயமேஞானம் | சித்து | வெற்றி - ஞானம் (உ) |
| செய்யென்பவிலமேவற்பேர். | செய் | விளைநிலம்-செய்யெனேவல் (உ) |
| 119—கக௯. | | உசு. |
| உத்திரஞ்சித்திரஞ்சேர்ந் [நாள், | உத்திரம் | இல்லுறுப்பாகியவுத்திரம் - ஓ |
| தொளிருமில்லுறுப்போடோர் | | ர்நட்சத்திரம் (உ) |
| பைத்தலேமுனிவிசேடு | பைத்தல் | கோபம் - பசுமை (உ) |
| பசுத்தலும்பகரலாகும், | | |
| மத்திகையேசம்மட்டி | மத்திகை | குதிரைசம்மட்டி - விளக்குத் |
| சுடர்நிலைத்தண்டிமாலை, | | தண்டு - பூமாலை (௩) |
| மத்தென்பதயிர்மத்தோடு | மத்து | தயிர் முதலிய கடையுமத்து- |
| மத்தமுமிருபேராமே. | | ஊமத்தை (உ) |
| 120—க௨0. | | உஎ. |
| மதர்வுமேவுதல்வனப்பு | மதர்வு | ஆசைப்பெருக்கம் - அழகு - |
| வலியிடமிகுதியைம்பேர், | | வலிமை-இடம் - மிகுதி (ரு) |
| புதவென்பகதவோர்புல்லாம் | புதவு | கதவு - ஓர்வகைப்புல் (உ) |
| புணர்ச்சியேகலவிகூடல், | புணர்ச்சி | சையோகம் - இசைப்பு (உ) |
| சிதருறிதிவலைவண்டு | சிதர் | உறி - துளி - வண்டு - சீலைத் |
| சீலையின்றுணிநாற்பேரே | | துணி (ச) |
| அதர்வழிபுழுதியாட்டி | அதர் | வழி - புழுதி - ஆட்டினதர் - |
| னதருநுண்மணலுமாமே. | | நுண்மணல் (ச) |
| 121—க௨க. | | உ௮. |
| முதலைசெங்கிடையிடங்கர் | முதலை | செஞ்சடை - நீர்வாழ்முதலை- |
| முருக்தெனமொழியலாகும், | | இறகினடிக்குருத்து (௩) |

| | | |
|---|---|---|
| அதமிறங்குதல்பாதாளங் கீழுமென்றதையுமுப்பேர், | அதம் | இறங்குதல் - பாதலம் - கீழ் (ங) |
| கதிநடைவிரைவேநான்கு கதியொடுகதியுங்காட்டும் | கதி | நடையின்வேகம் - தேவகதி முதலிய நாற்கதி - மூத்தி (ங) |
| மதமிபமதஞ்செருக்காம் | மதம் | யானைமதம் - களிப்பு (உ) |
| மாயையேமாயஞ்சத்தி | மாயை | வஞ்சனை - சத்தி (உ) |
| 122—கஉஉ. | | உக. |
| பீதமேசாந்துமஞ்சள் பிங்கலத்தொடுபொன்மைப்பேர் | பீதம் | நால்வகைச் சாந்திலொன்று - மஞ்சள் - பொன் - பொன் னிறம் (ச) |
| பேதையோர்பருவமூடன் பெண்டரித்திரனோநாற்பேர், | பேதை | பேதைப்பருவம் - அறிவிலா ன்-பெண் - தரித்திரன் (ச) |
| வாதுவர்யானைப்பாகர் வயப்பரிமாவடிப்போர்; | வாதுவர் | யானைப்பாகர் - குதிரைப்பா கர் (உ) |
| மூதிரையாதிரைப்பேர் முக்கணனெம்பெருமானே. | மூதிரை | திருவாதிரைநட்சத்திரம்-சிவ ன் (உ) |
| 123—கஉங. | | ௩0. |
| தாதியேபரணிநாளு மடிமையுமிருபேர்சாற்றும், | தாதி | பரணிநட்சத்திரம்-அடிமை (உ) |
| போதுதானகாலம்பூவாம் | போது | பொழுது - மலர் (உ) |
| போர்வைதோல்கவசமீககோள், | போர்வை | தோல்-மெய்க்கவசம் - மேற் போர்வை (ங) |
| சாதமேதிடம்பதப்பேர் | சாதம் | உண்மை - சோறு (உ) |
| தகைமையேரியல்புபீடாம் ; | தகைமை | அழகு - குணம் - பெருமை (ங) |
| வீதலேகெடுதல்சாவே யிலம்பாடும்விளம்புமப்பேர். | வீதல் | கெடுதல் - சாதல் - வறுமை (ங) |

தகரவெதுகை முற்றிற்று.

## அ-வது. நகரவெதுகை.

| | | |
|---|---|---|
| 124—கஉச. | | க. |
| இந்தனமிசையேகாட்ட மெரியிடுகனலுமாகும், | இந்தனம் | மேல் - விறகு - அக்கினிச்சு வாலை (ங). |
| சந்தமேநிறம்வனப்பு சாற்றியகவிதைசாந்தம், | சந்தம் | நிறம் - அழகு - கவிதை-சந்த னம் (ச) |
| கந்தமிந்தியம்பகுத்தல் கழுத்தடிகிழங்குநாற்றம், | கந்தம் | இந்திரியம் - பகுடல் - கழுத் தடி-கிழங்கு-வாசனை (ரு) |
| மந்திரம்விசாரங்கோயில் வாசியின்குழாம்வீடேகள். | மந்திரம் | ஆலோசனை - தேவாலயம் - குதிரைக்கூட்டம்-வீடு-கள் (ரு) |
| 125—கஉரு. | | உ. |
| அந்திலாங்கசையிடப்பேர் | அந்தில் ஆங்கு | அசைச்சொல் - இடம் (உ) |
| அணவலேயணுகல்புல்லல், | அணவல் | கிட்டல் - புணர்தல் (உ) |

| | | |
|---|---|---|
| சந்தியேயந்திமூங்கில் சதுக்கமுமிசைப்புமப்பேர், | சந்தி | மாலைக்காலம் - மூங்கில் - நாற்றெருக்கூடுமிடம் - இசைப்பு (ச) |
| நந்தியேசிவனுமேறு நந்தியீச்சுரனுமப்பேர், | நந்தி | சிவன் - இடபம் - நந்தியீச்சுரன் (ங) |
| உந்திதேருருளேயாறே யுவரிநீர்ச்சுழியேகொப்பூழ். | உந்தி | தேருருளை - நதி - கடல் - நீர்ச்சுழி - கொப்பூழ். (ரு) |
| 126—கஉசு. | | ங. |
| கந்துபண்டியுளிரும்புங் கம்பமும்யாக்கைமூட்டும், | கந்து | இருசு - தூண் - யாக்கையின் மூட்டு (ங) |
| கந்துகங்குதிரைபந்தாம் | கந்துகம் | குதிரை - பந்து (உ) |
| கனமென்பபுயல்பாரப்பேர், | கனம் | மேகம் - பாரம் (உ) |
| பந்துகந்துகமுமட்டுப் படர்நீர்துந் துருத்தியும்பேர், | பந்து | எறியும்பந்து - மட்டத்துருத்தி. (உ) |
| குந்தளமாதரோதி குழற்கொத்துக் குருளைமுப்பேர் | குந்தளம் | பெண்மயிர் - மயிர்க்கொத்து - விலங்கின்குட்டி. (ங) |
| 127—கஉஎ. | | ச. |
| வேந்தனேயரசன்றிங்கள் வியாழமிந்திரனாதித்தன், | வேந்தன் | இராசன் - சந்திரன் - சுரகுரு - தேவேந்திரன் - சூரியன் (ரு) |
| காந்தாரமிசைகாடென்ப | காந்தாரம் | ஓரிசை - காடு (உ) |
| காழகங்கருமைதுசாம், | காழகம் | கறுப்பு - ஆடை (உ) |
| ஏந்தலேபெருமைமேடாம் | ஏந்தல் | பெருமை - மேடு (உ) |
| எஃகுருக்கொடுவேல்கூர்மை, | எஃகு | உருக்கு - வேலாயுதம் - கூர்மை (ங) |
| கூந்தல்பெண்மயிர்பீலிப்பேர் | கூந்தல் | மாதர்மயிர் - மயிற்றோகை (உ) |
| குவலயங்குவளைபூமி. | குவலயம் | குவளைப்போது - பூமி (உ) |
| 128—கஉஅ. | | ரு. |
| அந்தரமுடிவுபேத மண்டமோடிடநாற்பேரே, | அந்தரம் | முடிவு - வேறுபாடு - ஆகாயம் - இடம் (ச) |
| கந்தரமென்பமேகங் கழுத்தொடுமலைமுழைப்பேர், | கந்தரம் | மேகம் - கழுத்து - மலைக்குகை (ங) |
| மந்தாரந்தருமரஞ்செவ் வரத்தமுமாகுமென்ப, | மந்தாரம் | ஐந்தருவிலொன்று - செவ்வரத்தம் (உ) |
| சிந்துரம்புளிமாயானை செங்குடை திலகஞ்செம்மை. | சிந்துரம் | புளிமா - யானை - சிவப்புக்குடை - பொட்டு - சிவப்பு. (ரு) |
| 129—கஉகூ. | | சு. |
| கந்தருவம்பண்வாசி | கந்தருவம் | இசைப்பாட்டு - குதிரை (உ) |
| கவந்தமென்பதுநீர்மட்டை, | கவந்தம் | நீர் - உடற்குறை (உ) |
| குந்தமேயொருவியாதி குருந்தொடுகுதிரைகைவேல், | குந்தம் | ஓர்நோய் - குருந்தமரம் - குதிரை - கைவேல் (ச) |
| செந்துவோர்நரகமோரி சீவனோடணுவுநாற்பேர், | செந்து | ஓர்நரகம் - கிழநரி - உயிர் - அணு (ச) |
| சிந்துநீர்முச்சீராறு கடல்குறளொருதேசப்பேர். | சிந்து | நீர் - முச்சீர் - நதி - கடல் - குள்ளம் - ஓர்தேசம் (சு) |

| | | |
|---|---|---|
| 130—௧௩0. | | எ. |
| அந்திமுச்சந்திபாலை<br>யாழிசையிரவுமாலை, | அந்தி | முத்தெருக்கூடுமிடம் - பாலை<br>யாழிசை - இராத்திரி - மா<br>லைக்காலம் (௪) |
| நந்தென்பநத்தைசங்காம் | நந்து | நத்தை - சங்கு (௨) |
| நாறுதன்மணமுண்டாதல், | நாறுதல் | மணத்தல் - உண்டாதல் (௨) |
| மைந்தனேதிறலோன்சேயாம் | மைந்தன் | திண்ணியன் - மகன் (௨) |
| வசந்தமேவேனில்வாசம், | வசந்தம் | வசந்தகாலம் - வாசனை (௨) |
| வந்தியார்புகழ்வோர்பேரு<br>மலடிகள்பேருமாமே. | வந்தியர் | புகழ்வோர் - மலடிகள் (௨) |
| 131—௧௩௧. | | அ. |
| விந்தமோரெண்ணும்வெற்பும் | விந்தம் | ஓரெண் - மலை (௨) |
| விருத்தமேவட்டமூப்பாம், | விருத்தம் | வட்டவடிவு - மூப்பு (௨) |
| அந்தணரறவோர்பார்ப்பார் | அந்தணர் | முனிவர் - பார்ப்பார (௨) |
| அணிபடைவகுப்பணிப்பேர், | அணி | படைவகுப்பு - ஆபரணம் (௨) |
| அந்தகன்குருடன்கூற்றும் | அந்தகன் | குருடன் - இயமன் (௨) |
| அங்காரகன்றீச்செவ்வாய், | அங்காரக<br>ன் | நெருப்பு - செவ்வாய் (௨) |
| மந்தனேசனிகூர்ப்பில்லா<br>மனுடனுமிருபேராமே. | மந்தன் | சனி - கூர்மையில்லான் (௨) |

நகரவெதுகை முற்றிற்று.

---

## ௯ - வது· பகரவெதுகை.

---

| | | |
|---|---|---|
| 132—௧௩௨. | | க. |
| உப்புமெல்லியலாராட<br>லுவர்கடலினிமைநாற்பேர், | உப்பு | மகளிர்விளையாட்டு - உவர்த்<br>தல் - கடல் - தித்திப்பு (௪) |
| செப்பமேநடுநிலைப்பேர்<br>தெருவொடுநெஞ்சமாகும், | செப்பம் | நடுநிலை - வீதி - மார்பு (௩) |
| துப்பரக்கூற்றந்தூய்மை<br>துகிர்பகையநுபவப்பேர், | துப்பு | அரக்கு - அறிவு-சுத்தம் - பவ<br>ளம் - பகை - அநுபோகம் (௬) |
| கப்பணமிரும்பிற்செய்த<br>நெருஞ்சின்முட் கைவேலாமே. | கப்பணம் | இரும்பினியற்றிய நெருஞ்சின்<br>முள் - கைவேல் (௨) |
| 133—௧௩௩. | | உ. |
| தாபரமலைபோனிற்றல்<br>சடமொடுதருவுமுப்பேர் | தாபரம் | மலைபோனிற்றல்-உடல்-மரப்<br>பொது (௪) |
| நீபமுத்திரட்டாதிப்பேர்<br>நிமித்தநீர்க்கடம்புமாகும், | நீபம் | உத்திரட்டாதிநட்சத்திரம் -<br>காரணம் - நீர்க்கடம்பு (௩) |
| யூபமேகவந்தம்வேள்விக்<br>குறுதம்பம்படைவகுப்பாம், | யூபம் | உடற்குறை - யாகத்தம்பம்-<br>படைவகுப்பு (௩) |
| சாபமேசபித்தல்வில்லாம் | சாபம் | சபித்தல் - வில் (௨) |
| தளிமமேயழகுமெத்தை. | தளிமம் | அழகு - மெத்தை (௨) |

| ௧௩௪—௧௩௪. | | ௩. | |
|---|---|---|---|
| சீப்பென்பகதவிற்றாழுஞ் சீவகங்கமுமாமென்ப, | சீப்பு | தாழக்கோல் - சீப்பு | (௨) |
| நாப்பணென்பதுதேர்த்தட்டு நடுவும்யாழுறுப்புமுப்பேர், | நாப்பண் | தேர்த்தட்டு - நடு - யாழுறுப்பு | (௩) |
| காப்பென்பகாவலோடு கதவும்வெண்ணீறுமாகும், | காப்பு | காவல் - கதவு - வெண்ணீறு | (௩) |
| யாப்பென்பகவிதைகட்டாம் | யாப்பு | பாட்டு - கட்டு | (௨) |
| இறாலென்கூடெருதுமீனே. | இறால் | தேன்கூடு - எருது - ஓர்மீன் | (௩) |

பகரவெதுகை முற்றிற்று.

---

## ௪௦ - வது. மகரவெதுகை.

| ௧௩௫—௧௩௫. | | | |
|---|---|---|---|
| சமன்யமனடுவுமாகும் | சமன் | இயமன் - நடு | (௨) |
| சலமென்பவயிரநீர்பொய், | சலம் | தணியாக்கோபம்-நீர் - அபத்தம் | (௩) |
| கமலநீர்வனசமும்பேர் | கமலம் | சலம் - தாமரை | (௨) |
| கலாஞ்சினங்கொடுமையாகும், | கலாம் | கோபம் - குரூரம் | (௨) |
| குமரிகற்றாழைகன்னி கொற்றவைகாளிக்கும்பேர், | குமரி | கற்றாழை-கன்னி - துர்க்கை - காளி | (௪) |
| ஞமலிநாய்மயில்கள்ளென்ப | ஞமலி | நாய் - மயில் - கள் | (௩) |
| நனைகள்ளுமலர்மொட்டும்பேர். | நனை | கள் - பூவரும்பு | (௨) |

| ௧௩௬—௧௩௬. | | ௨. | |
|---|---|---|---|
| சாமமோர்வேதம்பச்சை சாமமேகருமையாற்பேர், | சாமம் | ஓர்வேதம் - பச்சை - இரவு - கறுப்பு | (௪) |
| வாமமேகுறளிடப்பால் வனப்பொடு தொடையுமாமே, | வாமம் | குறள்-இடதுபக்கம் - அழகு - தொடை | (௪) |
| பூமலர்வனப்புக்கூர்மை பொலிவொடுபிறப்புப்பூமி, | பூ | மலர் - அழகு-கூர்மை - பொலிவு - பிறப்பு - பூமி | (௬) |
| ஏமமேசேமங்காவ லின்பம்பொன்னிரவேமையல். | ஏமம் | புதையல்-காவல்-சுகம் - பொன்-இராத்திரி - மயக்கம் | (௬) |

| ௧௩௭—௧௩௭. | | ௩. | |
|---|---|---|---|
| உம்பரேதேவராகு முயர்நிலமுடன்மேலும்பேர், | உம்பர் | தேவர்-தேவலோகம்-மேல் | (௩) |
| வம்பென்பபுதுமைகச்சு மணநிலையின்மைநாற்பேர், | வம்பு | புதுமை - முலைக்கச்சு - வாசனை - நிலையில்லாமை | (௪) |
| கும்பமேகுடமிராசி கும்பிமத்தகமுமாகும் | கும்பம் | குடம் - ஓரிராசி - யானைமத்தகம் | (௩) |
| தும்பென்பசிம்புமோடாம் | தும்பு | சிம்புள் - ஓர்கயிறு | (௨) |
| சுகமென்பகிளியேயின்பம். | சுகம் | கிளி - இன்பம் | (௨) |

| | | |
|---|---|---|
| 138—௧௩௮. | | ௪. |
| ஆம்பல்வேய்கள்ளுக்கவ்வை யல்லிவங்கியமேயானை, | ஆம்பல் | மூங்கில் - கள் - துன்பம் - அல்லி - வேய்ங்குழல் - யானை (௬) |
| சாம்பல்கூம்புதல்பழம்பூ | சாம்பல் | குவிதல் - பழம்பூ (௨) |
| ,தமிழெனபதினிமைசீர்மை, | தமிழ் | தித்திப்பு - குணம் (௨) |
| தாம்பெனபகயிறுதானே தாமணிதனக்கும்பேராம், | தாம்பு | கயிறு - தாமணி (௨) |
| காம்புவேய்மலர்த்தாள்பட்டே கடிமரக்கொம்பேநாற்பேர். | காம்பு | மூங்கில் - பூவின்காம்பு - பட்டுச்சீலை - மரக்கொம்பு (௪) |
| 139—௧௩௯. | | ௫. |
| அம்மையேவருபிறப்பு மழகுமாந்தாயுமாகும், | அம்மை | வருபிறப்பு - அழகு - தாய் (௩) |
| சும்மையென்பதுவேநெற்போர் நாடொலிசுமையுஞ்சொல்லும், | சும்மை | நெற்போர் - நாடு - சத்தம் - சுமை (௪) |
| செம்மைசெவ்வையுஞ்சிவப்பும் | செம்மை | செவ்வை - சிவப்பு (௨) |
| திரிதலேயுலாவல்கேடாம், | திரிதல் | உலாவல் - கேடு (௨) |
| கொம்மையேயிளமைவட்டங் கொங்கைகை குவித்துக்கொட்டல். | கொம்மை | இளமை-வட்டவடிவு - முலை-கைகுவித்துக்கொட்டல் (௪) |
| 140—௧௪௦. | | ௬. |
| அம்மழகசைச்சொனீராம் | அம் | அழகு - அசைச்சொல் - நீர் (௩) |
| அழனந்தீப்பிணமுமாகும், | அழனம் | நெருப்பு - பிரேதம் (௨) |
| கம்மெனபதலையாகாயங் கனங்கானீர்விதிவெளுப்பு, | கம் | தலை-ஆகாயம்-மேகம்-காற்று நீர் - பிரமன் - வெண்மை (௭) |
| செம்மலேபழம்பூவீசன் [தன் சினேந்திரன் சிறந்தோன்மைந் | செம்மல் | பழம்பூ-சிவன்-அருகதேவன்-சிறப்புற்றோன் - மகன் (௫) |
| கம்மியர்கைவினைப்பேர் கண்ணாளர்தாமுமாமே. | கம்மியர் | தொழில்செய்வோர் - கம்மாளர் (௨) |
| 141—௧௪௧. | | ௭. |
| வாமனங்குறள்புராண மாதிரக்கயத்தினொன்றும், | வாமனம் | குள்ளம் - ஓர்புராணம் - தென்றிசையானை (௩) |
| காமரமத்தநாளோ [ம், டடுப்பிசைப் பொதுவுங்காட்டு | காமரம் | அத்தநட்சத்திரம் - அடுப்பு - இசைப்பொது (௩) |
| நேமிசக்கரம்பார்வட்டம் நேமிப்புட்கடலம்பேரே, | நேமி | சக்கராயுதம்-பூமி - வட்டவடிவு - சக்கரவாகப்புள்-சமுத்திரம் () |
| தேமெனபதிடந்தித்திப்புத் தேனுற்றந்திசைதேசப்பேர். | தேம் | இடம் - தித்திப்பு - தேன் - வாசனை - திக்கு - தேசம் (௬) |
| 142—௧௪௨. [றை | | ௮. |
| தாமம்வெற் பொழுங்கு கொன் சாந்தொளிநகரந்தாம்பு, பூமணிக்கோவைமாலை பொருங்களங்கரியீராறும், | தாமம் | மலை - ஒழுங்கு - கொன்றைமரம்-சாந்து-பிரகாசம் - பட்டணம் - கயிறு-பூ-மணிக்கோவை-பூமாலை-போர்க்களம் - யானை (௧௨) |
| சோமனோர்வள்ளலிந்து | சோமன் | ஓர்வள்ளல் - சந்திரன் (௨) |
| சுரும்பெனபமலையும்வண்டும், | சுரும்பு | மலை - வண்டு (௨) |
| சாமியேமுதல்வன்செவ்வே டலைவியாசான்வெறுக்கை. | சாமி | கடவுள்-முருகக்கடவுள் - முதல்வி - குரு - பொன் (௫) |

| | | |
|---|---|---|
| 143—௧௪௩. | | ௯. |
| குமுதமேயடுப்போர்திக்கின் | குமுதம் | அடுப்பு - மேற்றிசையானை - |
| குஞ்சரமொலிவெண்ணெய்தல், | | சத்தம் - வெள்ளாம்பல் (௪) |
| சிமயமேமலைவெற்புச்சி | சிமயம் | மலை - மலையினுச்சி (௨) |
| தீத்தீயேநரகுதீங்காம், | தீ | நெருப்பு - நரகம் - தீமை (௩) |
| அமர்தலேபொலிவுதுன்னல் | அமர்தல் | பொலிவு - நெருங்கல் (௨) |
| அரிறுறுபிணக்கமாசு, | அரில் | சிறுதூறு - பிணக்கு - குற்றம் (௩) |
| சிமிலியேகுடுமிசிக்கஞ் | சிமிலி | சிகை - உறி - சிள்வண்டு (௩) |
| சிள்வீடுதானுமாமே. | | |
| 144—௧௪௪. | | ௧௦. |
| சம்புவேயிரவிநாவல் | சம்பு | சூரியன்-நாவன்மரம்-சிவன்- |
| சங்கரனயன்மாலோரி, | | பிரமன் - திருமால் - நரி (௬) |
| தும்பியேகளிறுவண்டாம் | தும்பி | யானை - வண்டு (௨) |
| துன்னலேசெறிதல்சேர்தல், | துன்னல் | நெருங்கல் - கிட்டல் (௨) |
| கம்புளேசங்குசம்பங் | கம்புள் | சங்கு - சம்பங்கோழி (௨) |
| கோழியென்றிருபேர்காட்டும், | | |
| அம்பரங்கடல்விண்சேலாம் | அம்பரம் | கடல் - ஆகாயம் - வஸ்திரம் (௩) |
| அண்ணலேதலைவன்பீடு. | அண்ணல் | அரசன் - பெருமை (௨) |
| 145—௧௪௫. | | ௧௧. |
| கிம்புரிமுடிதந்தப்பூண் | கிம்புரி | முடி-யானைக்கொம்பிற்பூண் (௨) |
| கேட்டைதான்மூதேவியோர்நாள், | கேட்டை | மூதேவி - ஓர்நட்சத்திரம் (௨) |
| கும்பிசேறானைநரகந் [தாம், | கும்பி | சேறு - யானை - நரகம் (௩) |
| குலைதான்செய்கரைகாய்க்கொத் | குலை | செய்கரை - காய்க்குலை (௨) |
| உம்பலாண்விலங்குமேழ | உம்பல் | ஆண்மிருகம் - யானை-குலம் - |
| முயர்குலமெழுச்சிக்கும்பேர், | | எழுச்சி (௪) |
| அம்பலேபழிச்சொல்சிலரோ | அம்பல் | பழிச்சொல் - சிலரறிந்து தம் |
| ரறிந்தலர்தூற்றலாமே. | | முட் புறங்கூறல் (௨) |
| 146—௧௪௬. | | ௧௨. |
| கம்பலையச்சமோசை | கம்பலை | பயம் - சத்தம் - நடுக்கம் - |
| கம்பிதந்துன்பநாற்பேர், | | துன்பம் (௪) |
| செம்புலம்பாலைசேருந் | செம்புலம் | பாலைத்திணை - போர்க்களம் (௨) |
| திணைசெருக்களமிரண்டாம், | | |
| தம்பமேகவசந்தூணும் | தம்பம் | கவசம் - தூண் (௨) |
| சமழ்த்தலேவருத்தநாணம், | சமழ்த்தல் | வருத்தம் - வெட்கம் (௨) |
| கம்பமேநடுக்கந்தம்பம் | கம்பம் | நடுக்கம் - தூண் (௨) |
| கந்தனேயருகன்செவ்வேள். | கந்தன் | அருகதேவன் - முருகக்கடவுள் () |
| 147—௧௪௭. | | ௧௩. |
| அமரரேவிபுதர்தெவ்வர் | அமரர் | தேவர் - பகைஞர் (௨) |
| அவந்திதான்கிளியோரூராம், | அவந்தி | கிளி - ஓரூர் (௨) |
| அமுதபாறேவருண்டி | அமுது | பால்-தேவருணவு-அமிர்தம் (௩) |
| யாகுமின்சுவையுமுப்பேர், | | |
| அமலையேயாரவார | அமலை | ஒலி - சோறு - பார்வதி (௩) |
| மயினியோடுமையுமுப்பேர், | | |
| தமமிருளிராகுவின்பேர் [ம் | தமம் | இருள் - இராகுக்கோள் (௨) |
| சார்ங்கம்விற்பொதுமால்வில்லா | சார்ங்கம் | விற்பொது - திருமால்வில் (௨) |

| 148—௧௪௮. | | ௪௪. | |
|---|---|---|---|
| ஆம்பிரம்புளிமாத்தேமா | ஆம்பிரம் | புளிமா - தேமா - புளிப்பு | (௩) |
| 'வாம்புளிப்பினுக்குமப்பேர், | | | |
| சாம்புபொன்பறையாமென்ப | சாம்பு | பொன் - பறை | (௨) |
| தாண்டவங்கூத்தேதாவல், | தாண்டவம் | கூத்து - தாண்டுதல் | (௨) |
| பாம்பெனபகரைமராளம் | பாம்பு | கரை - பாம்பு | (௨) |
| பையராப்படமேபச்சை, | பை | பாம்பின்படம் - பச்சை | (௨) |
| ஆம்பியேயொலிகாளானும், | ஆம்பி | சத்தம் - காளான் | (௨) |
| அயிராணியுமையிந்திராணி. | அயிராணி | பார்வதி - இந்திராணி | (௨) |

| 149—௧௪௯. | | ௪௫. | |
|---|---|---|---|
| காமனேவாசவன்வேள் | காமன் | தேவேந்திரன் - மன்மதன் - | |
| சமுழுதுந்திப்பிலியுமாகும், | | வண்டு - திப்பிலி | (௪) |
| காமமேவிரகமாசை | காமம் | காமநோய் - ஆசை | (௨) |
| கணிச்சிதான்மழுவேதோட்டி, | கணிச்சி | மழு - அங்குசம் | (௨) |
| பூமனேபிரமன்செவ்வாய் | பூமன் | பிரமதேவன் - செவ்வாய் | (௨) |
| புரையோரேகீழோர்மேலோர், | புரையோர் | கீழ்மக்கள் - மேன்மக்கள் | (௨) |
| சேமமேகாவலின்பம் | சேமம் | காவல் - இன்பம் | (௨) |
| தெக்கணம்வலந்தெற்காகும். | தெக்கணம் | வலப்பக்கம் - தெற்கு | (௨) |

| 150—௧௫௦. | | ௧௬. | |
|---|---|---|---|
| காமுகன்விடன்வேண்மாலாம் | காமுகன் | தூர்த்தன்-மன்மதன்-திருமால் | () |
| காதென்பகொலையுங்காதும், | காது | கொலை - காது | (௨) |
| கோமளம்பசுவனப்புக் | கோமளம் | பசு - அழகு - இளமை | (௩) |
| கூறியவிளமைக்கும்பேர், | | | |
| நாமமாங் (கலித்தல்) மிக்கு | கலித்தல் | மிகுதி - டொலிவு - எழுச்சி - | |
| நற்பொலிவெழுச்சியோசை, | | சத்தம் | (௪) |
| மாமையேநிறம்வனப்பாம் | மாமை | நிறம் - அழகு | (௨) |
| மலயசஞ்சந்தந்தென்றல். | மலயசம் | சந்தனமரம் - தென்றல் | (௨) |

மகரவெதுகை முற்றிற்று.

---

## ௧௧-வது. யகரவெதுகை.

| 151—௧௫௧. | | ௧. | |
|---|---|---|---|
| காயமெய்விண்வெண்காயம் | காயம் | உடல் - ஆகாயம் - வெண்கா | |
| பெருங்காயங்கறிகரித்தல், | | யம்-பெருங்காயம்-மிளகு- | |
| | | கரிப்பு | (௬) |
| நேயநெய்யெண்ணெயன்பாம் | நேயம் | நெய் - எண்ணெய் - அன்பு | (௩) |
| நிறமென்பமாருமங்காந்தி, | நிறம் | மார்பு - பிரகாசம் | (௨) |
| ஆயமேகவற்றிற்றாய | ஆயம் | சூதாடுகருவி - இலாபம் - பெ | |
| மாதாயமாதர்கூட்டம், | | ண்கள் கூட்டம் | (௩) |
| சாயலென்பதுமேம்பாடு | சாயல் | மேம்பாடு-அழகு - மென்மை | (௩) |
| தருமழகுடனேமென்மை. | | | |

| | | |
|---|---|---|
| 152—௧௫௨. | | ௨. |
| வயநீர்புட்பொதுவலிப்பேர் | வயம் | நீர்-பறவைப்பொது-வலிமை (௩) |
| வயல்வெளிபழனமும்பேர், | வயல் | வெளி - கழனி (௨) |
| சயம்வெற்றிசருக்கரைப்பேர் | சயம் | வெற்றி - சருக்கரை (௨) |
| சடமுடல்வஞ்சம்பொய்யாம், | சடம் | சரீரம் - வஞ்சனை - பொய் (௩) |
| நியமமேவியதிவீதி நிச்சயநகரங்கோயில் | நியமம் | செய்கடன்-தெரு - நிச்சயம்- பட்டணம் - கோயில் (௫) |
| இயமென்பவொலியேவார்த்தை வாச்சியமிம்முப்பேரே. | இயம் | சத்தம் - சொல் - வாச்சியப் பொது. (௩) |
| 153—௧௫௩. | | ௩. |
| அயமென்பநீர்தடாக மாடுவெம்பரியிரும்பாம், | அயம் | நீர் - குளம் - ஆடு குதிரை - இரும்பு (௫) |
| கயமேன்மைகுளமேயாழங் களிறுகீழ்பெருமைதேய்வாம், | கயம் | மேன்மை-குளம் - ஆழம்-யானை - கீழ் - பெருமை - தேய்வு (௭) |
| பயமென்பசுதைநீரச்சம் பாலொடுபயன்பேரைந்தே, | பயம் | அமிர்தம் - நீர் - பயம் - பால்- பயன் (௫) |
| அயனமேவழியினும மாண்டினிற்பாதிக்கும்பேர். | அயனம் | வழி - வருடப்பாதி (௨) |
| 154—௧௫௪. | | ௪. |
| பயிரொலிபயிலேபைங்கூழ் பறக்கும்புட்குரலிந்நாற்பேர், | பயிர் | சத்தம் - சைகை - பயிர் - பறவைக்குரல் (௪) |
| கயினியேயத்தநாளுங் கைம்மையுமிருபேர்காட்டும், | கயினி | அத்தநட்சத்திரம்-கைம்பெண் () |
| வயிரமேசெற்றங்கூர்மை வச்ரமோர்மணியேசேகு, | வயிரம் | சலஞ்சாதித்தல் - கூர்மை - வச்சிராயுதம் - வச்சிரமணி - மரவயிரம் (௫) |
| கயில்பிடர்த்தலையேபூணின் கடைப்புணர்விருபேர்தானே. | கயில் | பிடரி - ஆபரணக்கடைப் புணர்வு. (௨) |
| 155—௧௫௫. | | ௫. |
| ஐயமேபிச்சையேற்கு மோடனுமானம்பிச்சை, | ஐயம் | பிச்சையேற்கும் பாத்திரம் - சந்தேகம் - பிச்சை (௩) |
| ஐயனேமூத்தோன்சாத்த னப்பனீச்சுரனும்பேரே, | ஐயன் | மூத்தோன் - ஐயனார் - தகப்பன் - சுவாமி (௪) |
| தொய்யலேயுழவுஞ்சேறுந் துயரமுமகிழ்ச்சியும்பேர், | தொய்யல் | உழவு-சேறு-துன்பம்-களிப்பு(௪) |
| மொய்செருக்களம்போரியானை மூசல்வண்டொடுதிரட்பேர். | மொய் | போர்க்களம் - யுத்தம் - யானை - மொய்த்தல்-வண்டு-கூட்டம்() |
| 156—௧௫௬. | | ௬. |
| வயவனேவீரனோடு வலியான்காதலனுமாகும், | வயவன் | வீரன் - வலியன் - தலைவன் (௩) |
| குயிறலேசெறிதல்கூவல் குடைதல்பண்ணுதனும்பேரே, | குயிறல் | நெருங்கல் - அழைத்தல் - குளித்தல் - செய்தல் (௪) |
| வயினிடமுதரம்வீடாம் | வயின் | இடம் - வயிறு - வீடு (௩) |
| வயாக்கருவருத்தங்காதல், | வயா | கருப்பம் - வருத்தம் - ஆசை (௩) |
| மயல்செத்தைமயக்கம்பேயாம் | மயல் | செத்தை - மயக்கம் - பேய் (௩) |
| மறவரேவயவர்வேடர். | மறவர் | படைவீரர் - வேடர் (௨) |

| | | |
|---|---|---|
| 157—கருஎ. | | எ. |
| குயிலேகோகிலமுஞ்சொல்லுங் | குயில் | ஓர்பட்சி-வார்த்தை - மேகம்- |
| கொண்மூவுந்தொளையுநாற்பேர் | | தொளையுடைப்பொருள் (ச) |
| வயமாவேகுதிரைசிங்க | வயமா | குதிரை - சிங்கம் - மதயானை- |
| மதகரிபுலியுமாகும், | | புலி (ச) |
| வியலென்பவிசாலம்பீடாம் | வியல் | விரிவு - பெருமை (உ) |
| வேய்தொளையொற்றுமூங்கில், | வேய் | உட்டொளை-வேவு-மூங்கில் (ங) |
| மயிலையேமீனராசி | மயிலை | மீனவிராசி-மீன்-இருவாட்சி .(ங) |
| மீனிருவாட்சிமுப்பேர். | | |
| 158—கருஅ. | | அ. |
| சயிந்தவங்குதிரையோடு | சயிந்தவம் | குதிரை - தலை - இந்துப்பு (ங) |
| தலையுமிந்துப்புமாகும், | | |
| குயந்தனமிளமையோடு | குயம் | முலை - இளமை - அரிவாள் (ங) |
| கூரரிவாளுமுப்பேர், | | |
| நயந்தோனேநண்பன்கொழுநன் | நயந்தோன் | தோழன் - கணவன் (உ) |
| நலம்விருச்சிகமேநன்மை, | நலம் | தேள் - நன்மை (உ) |
| பயம்பென்பதானைவீழும் | பயம்பு | ஆனைவீழும்படுகுழி - பள்ளம்(உ) |
| படுகுழிபள்ளமாமே. | | |
| 159—கருகூ. | | கூ. |
| இயனடைதமிழ்சாயற்பேர் | இயல் | ஒழுக்கம்-இயற்றமிழ்-சாயல் (ங) |
| ஏல்வையேபொழுதுவாவி, | ஏல்வை | காலம் - தடாகம் (உ) |
| குயவென்பகறிகரித்தல் | குயவு | கறிதாளிப்பு - நறும்புகை (உ) |
| குளிர்நறும்புகையிரண்டாம், | | |
| செயிரென்பசினங்குற்றப்பேர் | செயிர் | கோபம் - குற்றம் (உ) |
| சேடிவிஞ்சையருர்பாங்கி, | சேடி | வித்தியாதரருலகு - தோழி (உ) |
| உயவைகாக்கணமேமுல்லை | உயவை | காக்கணஞ்செடி - முல்லைக் |
| யுற்றகான்யாறுமாமே. | | கொடி - காட்டாறு (ங) |
| 160—கசுo. | | கo. |
| செய்யலேயொழுக்கங்காவல் | செய்யல் | ஒழுக்கம் - காவல் - சேறு - |
| சேறுசெய்வினைநாற்பேரே, | | செய்தொழில் (ச) |
| நெய்தலேகடற்சார்பூமி | நெய்தல் | நெய்தனிலம் - ஆம்பற்பூ - |
| நெய்தற்பூச்சாப்பறைப்பேர், | | சாப்பறை (ங) |
| வெய்யோனுதவனேதீயோன் | வெய்யோன் | சூரியன் - கொடியோன் - |
| விரும்பினன்றனக்குமப்பேர் | | விருப்புற்றோன் (ங) |
| ஐயையேயுமையாடுர்க்கை | ஐயை | பார்வதி-துர்க்கை-மகள்-தவ |
| மகளருந்தவப்பெண்ணுசாள். | | ப்பெண் - தலைவி (ரு) |
| 161—கசுக. | | கக. |
| ஐயழகிடைச்சொல்கோழை | ஐ | அழகு-இடைச்சொல் - கோழை - |
| யரசனேடிருமல்சாமி, | | இராசன் - இருமல்-கடவுள் () |
| மையென்பதஞ்சனங்கார் | மை | மை - மேகம்-மலடு - இருள் - |
| மலடிருளாடுமாசாம், | | ஆடு - குற்றம் (சு) |
| கையிடம்படைவகுப்பொப் | கை | இடம் - படைவகுப்பு - அலங் |
| பனைசெங்கைசிறுமைசீலம், | | காரம் - கைத்தலம் - அற் |
| | | பம் - ஒழுக்கம் (சு) |
| வையந்தேரேறுரோணி | வையம் | தேர்-எருது - உரோகிணிநட்சத்தி |
| வசுந்தரைசிவிகையூர்தி. | | ரம்-பூமி-தண்டிகை - வாகனம் |

| 162—கசுஉ. | | கஉ. |
|---|---|---|
| செய்குகனிளமைதூரஞ் செம்மைசேண்சிறுவன்செவ் [வாய், | சேய் | முருகக்கடவுள் - இளையதன்மை - தூரம் - சிவப்பு - நீளம் - மகன் - செவ்வாய் (எ) |
| வாய்குழலிடம்வாய்மைப்பேர் | வாய் | ஊதுகுழல் - இடம் - உண்மை () |
| மாருதியனுமன்வீமன் | மாருதி | அனுமன் - வீமன் (உ) |
| ஆய்தலேநுணுக்கந்தேர்தல் | ஆய்தல் | நுண்மை - ஆராய்தல் (உ) |
| ஆறெனபவழிநதிப்பேர், | ஆறு | வழி - நதி (உ) |
| வேய்தல்சூழ்தன்மூடற்பேர் | வேய்தல் | சூழ்தல் - மூடுதல் (உ) |
| விநாயகனருகன்முன்னோனும். | விநாயகன் | அருகதேவன் - கணபதி (உ) |

| 163—கசுங. | | கரு. |
|---|---|---|
| அயிர்கரும்பின்றேங்கட்டி யான்றநுண்மணைமேனுண்மை, | அயிர் | கருப்பங்கட்டி - நுண்மணல் - நுண்மை (ந) |
| செயறொழிலொழுக்கமென்ப | செயல் | தொழில் - ஒழுக்கம் (உ) |
| தெய்வமேகடவுளூழாம், | தெய்வம் | கடவுள் - ஊழ் (உ) |
| நயமென்பமகிழ்ச்சியின்ப நன்மைகற்பயனுற்பேரே, | நயம் | களிப்பு - இன்பம் - நன்மை - பயன் (ச) |
| பெயரென்பபெருமைகீர்த்தி பேசுநாமப்பேராமே. | பெயர் | பெருமை - புகழ் - பேர் (ந) |

யகரவெதுகை முற்றிற்று.

---

## கஉ-வது. ரகரவெதுகை

| 164—கசுச. | | ச. |
|---|---|---|
| சிரகமேகரகமாகுஞ் சென்னியிற்சேரடுமப்பேர், | சிரகம் | கரகம் - தலைச்சிரா (உ) |
| கரகமேயாலங்கட்டி கமண்டலந்துளிநீர்கங்கை, | கரகம் | மழைக்கட்டி - கமண்டலம் - நீர்த்துளி - கங்கை (ச) |
| மரபுதான்முறைமைதொன்மை | மரபு | பாரம்பரியம் - பழமை (உ) |
| மறலென்பபிணக்குங்கூற்றும், | மறல் | பிணக்கு - இயமன் (உ) |
| சரபமெண்காற்புள்ளென்ப வரையாடுதானுமாமே. | சரபம் | எண்காற்பட்சி - வரையாடு (உ) |

| 165—கசுரு. | | உ. |
|---|---|---|
| இரதமேபுணர்ச்சிசூத மின்சுவை யரைஞாண்பொற் [றேர், | இரதம் | சையோகம் - இரசம் - இனியசுவை - அரைநாண் - தேர் (ரு) |
| அரணமேகவசங்காடே யணிமதில்வேலிகாற்பேர், | அரணம் | மெய்க்கவசம் - காடு - மதில் - வேலி (ச) |
| கரணமெண்மனதிகூத்துக் கலவிகாரணமைம்பேரே, | கரணம் | எண்ணிக்கை - மனமுதலியகரணம் - கூத்தின்விகற்டம் - சம்போகம் - உபகரணம் (ரு) |
| சரணந்தான்மறைபுகற்பேர் | சரணம் | கால் - அடைக்கலம்புகுதல் (உ) |
| தன்னமான்கன்றேயற்பம். | தன்னம் | பசுவின்கன்று - சிறுமை (உ) |

| | | |
|---|---|---|
| 166—கசுசு. | | ௬. |
| உரமென்பவலியேஞான | உரம் | வலிமை - ஞானம் - உள்ளக் |
| மூக்கமேமார்புசாற்பேர், | | கிளர்ச்சி - மார்பு (௪) |
| சிரமென்பநெடுங்காலப்பேர், | சிரம் | நெடுங்காலம் - தலை (உ) |
| சென்னியுமன்னதேயாம், | | |
| புரமென்பபுரிமுன்மெய்ப்பேர் | புரம் | மருதநிலத்தூர் - முன்-உடல் (௩) |
| புரவலன்வள்ளல்வேந்தன், | புரவலன் | கொடையாளன் - அரசன் (உ) |
| கரமென்பகிரணஞ்செங்கை | கரம் | ஒளி - கைத்தலம் - கழுதை - |
| கழுதைநஞ்சிறுத்தலும்பேர். | | விடம் - குடியிறை (௫) |
| 167—கசுஎ. | | ௪. |
| அரவநூபுரம்பாம்போசை | அரவம் | காற்சிலம்பு - பாம்பு - ஒலி (௩) |
| ஆய்வென்பவருத்தமாய்தல், | ஆய்வு | வருத்தம் - ஆராய்தல் (உ) |
| பரவைவாரிதிபரப்புப் | பரவை | கடல் - பரப்பு - திருநடனமா |
| பங்கயமாதின்கூத்தே, | | டல் (௩) |
| இரலையேகலையூதுங்கொம் | இரலை | ஆண்மான் - ஊதுகொம்பு - |
| பிரண்டுடன்முதனுளென்ப, | | அச்சுவனிநட்சத்திரம் (௩) |
| அரசுமன்னிராச்சியப்பேர் | அரசு | அரசன் - இராச்சியம் (உ) |
| அம்பிநாவாயேதெப்பம். | அம்பி | மரக்கலம் - தெப்பம் (உ) |
| 168 — கசுஅ. | | ௫. |
| அரம்பைதெய்வப்பெண்வாழை | அரம்பை | தெய்வப்பெண் - வாழை (உ) |
| ஆணுவேயிரதநன்மை, | ஆணு | இனிமை - நன்மை (உ) |
| சரந்தனிமணிவடம்போர் | சரம் | மணிவடம் - யுத்தம் - அம்பு - |
| சாயகநாணற்புற்பேர், | | நாணற்புல் (௪) |
| நரந்தமென்பதுநாரத்தை | நரந்தம் | நாரத்தை - கஸ்தூரி (உ) |
| நாறுங்கஸ்தூரிக்கும்பேர் | | |
| சுருங்கையேகரந்துபண்ணுங் | சுருங்கை | கோட்டையிற் கள்ளவழி - |
| கற்படைநுழைவாயிற்பேர். | | நுழைவாயில் (உ) |
| 169—கசுகூ. | | ௬. |
| ஆரமேபதக்கமுத்த | ஆரம் | பதக்கம்-முத்து-ஆத்திமரம்- |
| மாத்திசந்தனமேமாலை, | | சந்தனமரம் - பூமாலை (௫) |
| வாரநீர்க்கரையேயன்பு | வாரம் | நீர்க்கரை - அன்பு - மலைச்சா |
| மலைச்சாரல்கிழமைபங்காம், | | ரல் - ஏழுகிழமை - பங்கு (௫) |
| தாரம்வல்லிசைநாவெள்ளி | தாரம் | வல்லிசை-நா-வெள்ளி-மனைவி- |
| தலைவியாழிசைஒன்றெனன்ப, | | வீணைநரம்பிலொன்று-கண் () |
| கோரஞ்சோழன்மாவட்டில் | கோரம் | சோழன்குதிரை-வட்டில்-கொ |
| கொடுமைபூமொட்டுவாசி. | | டுமை-பூவரும்பு-குதிரை (௫) |
| 170—கஎ0. | | எ. |
| இராசியமறைவேயோனி | இராசியம் | மறைவு - பெண்குறி (உ) |
| இறப்பென்பமிகுதிபோக்காம், | இறப்பு | மிகுதி - போதல் (உ) |
| பராகமேயிரேணுவாகும் | பராகம் | இரேணு - பூந்துகள் (உ) |
| பரிமளமலர்த்துளும்பேர், | | |
| துரோணமேசிம்புள்காக்கை | துரோணம் | என்காற்பட்சி - காக்கை - தும் |
| தும்பைவில்லொடுபதக்காம், | | பைச்செடி - வில் - பதக்கு (௫) |
| இராகமேகீதஞ்செம்மை | இராகம் | இசைப்பாட்டு - சிவப்பு - |
| யிச்சையேநிறமுமேற்கும். | | ஆசை - நிறம் (௪) |

| | | |
|---|---|---|
| 171—௧௭௧. | | ௮. |
| டரிபரிசுமத்தல்வேகம் | பரி | குதிரை - சுமத்தல் - சீக்கிரம் - |
| பாதுகாத்திடல்வருத்தம், | | பாதுகாத்தல் - வருத்தம் (௫) |
| புரிவளைவிரும்பல்செய்தல் | புரி | சங்கு - விரும்புதல் - செய்தல் - |
| புரத்தொடுகயிறுகட்டாம், | | நகரம் - கயிறு - கட்டு (௬) |
| பரிதலேயறுத்தலன்பு | பரிதல் | அறுத்தல் - அன்பு - இரங்கல் (௩) |
| பகர்ந்திடிரங்கலும்பேர், | | |
| வரிசுணங்கெழுத்துப்பாட்டு | வரி | தேமல் - எழுத்து - இசைப் |
| வாரிதியிறையெநெல்லு, | | பாட்டு - கடல் - குடியி |
| | | றை - நெல் (௬) |
| 172—௧௭௨. | | ௯. |
| சரிகரவளைவழிப்பேர் | சரி | கைவளை - வழி (௨) |
| சராவமேயகல்சலாகை, | சராவம் | அகல் - சலாகை (௨) |
| கரியவன்சனியின்பேராங் | கரியவன் | சனி - திருமால் - தேவேந்தி |
| கண்ணனிந்திரனுமாமே, | | ரன் (௩) |
| பரிகமேகிடங்குமேடை | பரிகம் | அகழி - மதிலுண்மேடை - |
| பகர்மதில்சுணையநாற்பேர், | | மதில் - வளைதடி (௪) |
| கரில்குற்றங்காழ்த்தலும்பேர் | கரில் | குற்றம் - உறைதல் (௨) |
| காதைசொற்கதையுமாமே. | காதை | சொல் - கதை (௨) |
| 173—௧௭௩. | | ௧௦. |
| மூரியேயெருமையாற்றன் | மூரி | எருது - எருமை - வலிமை - |
| முறைபீடுநெரிவுமாமே, | | பழமை - பெருமை - நெரிவு (௬) |
| வாரிநீர்சுதவுவெள்ள | வாரி | நீர் - கதவு - வெள்ளம் - மதில் - |
| மதில்கடல்வருவாயவட்டை, | | கடல் - [illegible] - வழி (௭) |
| நாரிபன்னாடைபெண்ணே | நாரி | பன்னாடை - பெண் - வாசனை - |
| நறவுவிற்குணிநாற்பேர், | | [illegible] (௪) |
| பாரியோர்வள்ளல்கட்டிற் | பாரி | [illegible]ழு வள்ளலிலொரு |
| பாரிகடமிசுழுங்கீர். | | வன் - கட்டில் - மனைவி - |
| | | கள் - ஆடை - கடல் (௬) |
| 174—௧௭௪. | | ௧௧. |
| அருகலேசுருங்கல்சார்தல் | அருகல் | குறைதல் - சார்தல் (௨) |
| அமுதமேசுதைநீர்மோக்கம், | அமுதம் | அமிர்தம் - நீர் - மோட்சம் (௩) |
| பொருளேசொற்பொருள்பல்பண்டம் | பொருள் | சொற்பொருள் - பலபண் |
| | | டம் - பொன் - குணம் - |
| பொன்பண்புபிள்ளைவாய்மை, | | மகன் - உண்மை (௬) |
| குருநிறமோர்நோய்தேயங் | குரு | நிறம் - ஓர்வியாதி - ஓர்தேயம் - |
| குரவன்பாரம்வியாழம், | | ஆசான் - பாரம் - பிரகஸ்பதி (௬) |
| அருணமென்பதுமான்செம்மை | அருணம் | மான் - சிவப்பு - ஆடு - எலு |
| யாடெலுமிச்சைநாற்பேர். | | மிச்சை (௪) |
| 175—௧௭௫. | | ௧௨. |
| முருகுகள்ளிளமைநாற்ற | முருகு | கள் - இளமை - வாசனை - முரு |
| முருகவேள்விழாவனப்பாம், | | கன் - திருவிழா - அழகு (௬) |
| மருமானேமருமகன்பேர் | மருமான் | மருமகன் - மகன் (௨) |
| வழித்தோன்றற்பேருமாமே, | | |
| இருசுபண்டியுளிரும்பு | இருசு | வண்டியுளிரும்பு - செவ்வை (௨) |
| செவ்வையென்றிருபேரென்ப, | | |

| | | |
|---|---|---|
| க ,, மையேபெருமையாகுங் கறுப்பொடுவலியுமாமே. | கருமை | பெருமை - கறுப்பு - வலிமை (௩) |
| 176—கஎசு. | | கந. |
| கிருத்திமந்தோலேபண்ணல் கெட்டபொய்விட்டபூதம், | கிருத்தியம் | தோல் - செய்தல் - பொய் - பூதகணம் (௪) |
| விருத்தியேதொழிலிலாபம் விரிபொருள் வளர்ச்சிக்கும் பேர், | விருத்தி | தொழிலிலாபம்-விரிபொருள்-வளர்தல் (௩) |
| துருத்தியாற்றிடைக்குறைப்பேர் தோலுமாந்துட்டைக்கும்பேர், | துருத்தி | ஆற்றிடைக்குறை - தோல் - வசவி (௩) |
| அரத்தமேயிரத்தஞ்செம்மை யரக்கொடுற்பலங்கடம்பு. | அரத்தம் | உதிரம் - சிவப்பு - அரக்கு - செங்குவளை-கடப்பமரம் (௫) |
| 177—கஎஎ. | | கச. |
| சீர்செல்வந்தாளவொத்துச் சீர்த்திசுரத்தண்டேடபாரம், | சீர் | செல்வம் - தாளவொத்து-மிகுபுகழ்-காவடித்தண்டு-கனம் (௫) |
| தார்கொடிப்படைபூத்தண்டு தாமங்கிண்கிணியின் கோவை, | தார் | டைமுன்னணி-மலர்-சேனை-பூமாலை - கிண்கிணிமாலை (௫) |
| சூரென்பநோயேயச்ச மஞ்சாமையணங்குஞ்சொல்லு | சூர் | வியாதி - அஞ்சுதல் - அஞ்சுதலின்மை - தெய்வப்பெண் (௪) |
| கார்நீர்வெள்ளாடுமேகங் [ம், கறுப்பிருண்மாரிக்காலம். | கார் | நீர் - வெள்ளாடு - மேகம்-கருமை - இருள் - கார்காலம் (௬) |
| 178—கஎஅ. | | கரு. |
| ஆர்கூர்மையாத்திதேரி னைத்துருவாணிக்கும்பேர், | ஆர் | கூர்மை - ஆத்திமரம் - தேரினகத்திற்செறிகதிர் (௩) |
| பீரென்பமுலையிற்பாலும் பீர்க்கொடுபசலைக்கும்பேர், | பீர் | முலைப்பால் - பீர்க்கு - துன்பத்தால் வேறுபட்டநிறம் (௩) |
| வாரென்பநெடுமைகச்சு மன்னுநீர்நேர்மைநாற்பேர் | வார் | நீலம் - முலைக்கச்சு - நீர் - நேர்மை (௪) |
| நேர்சமமீதல்பாதி நெடிலுடன்பாடுநுட்பம் | நேர் | ஒப்பு - கொடுத்தல் - பாதி - நீளம்-உடன்பாடு-நுட்பம் (௬) |
| 179—கஎகூ. | | கசு. |
| அருணன்சூரியன்றேர்ப்பாக னுதித்தன்புதன்முப்பேரே, | அருணன் | சூரியன்றேர்ப்பாகன்-சூரியன்-புதன் (௩) |
| வருணமேகுலநீராகும் | வருணம் | குலம் - சலம் (௨) |
| மகனென்பசிறந்தோன்மைந்தன் | மகன் | சிறப்புற்றோன் - புத்திரன் (௨) |
| தரணிபாரிரவிவெற்பாந் | தரணி | பூமி - சூரியன் - மலை (௩) |
| தையல்பெண்ணழகுமாகும், | தையல் | பெண் - அழகு (௨) |
| கரிணியேமுழையும்வெற்புங் களிற்றொடுபிடியுங்காட்டும். | கரிணி | மலையினுட்குகை-மலை-யானை-பெண்யானை (௪) |
| 180—கஅ0. | | கஎ. |
| மாரியேவிளிவுகள்ளு வம்மிநோய்மேகமைம்பேர், | மாரி | சாவு-கள்-காடுகாள்-வியாதி-மேகம் (௫) |
| ஓரியாண்மயிரோர்வள்ளன் முதுநரிமுசுவென்றோதும், | ஓரி | குடுமி-ஒருவள்ளல்- கிழநரி-ஆண்முசு (௪) |
| காரியோர்வள்ளலையன் | காரி | கடையெழுவள்ளலிலொருவன் |

| | | |
|---|---|---|
| கடுச்சனிவடுகன்காக்கை, | | ஐயனார் - விடம் - சனி -<br>வயிரவன் - காக்கை (கூ) |
| தூரியமிடபமாடை<br>துந்துமியெழுதுங்கோலே. | தூரியம் | எருது - வஸ்திரம் - முரசம் -<br>எழுதுகோல் (ச) |
| 181—கஅக. | | கஅ. |
| பிரமமேவேதம்வேள்வி<br>மந்திரம்பிரமன்மாலோ,<br>டிரவிதீமுனிவர்முத்தி<br>யீசனம்புலிபன்றென்றே, | பிரமம் | வேதம் - யாகம் - மந்திரம்-பிரம<br>தேவன் - திருமால் - சூரியன் -<br>நெருப்பு - இருடிகள் - மோட்<br>சம் - சிவன் - சந்திரன் (கக) |
| அரசனேவியாழமன்னும் | அரசன் | பிரகற்பதி - இராசன் (உ) |
| அம்பணந்தோணியாமை, | அம்பணம் | தோணி - ஆமை (உ) |
| குரல்கதிர்சிறகுமாதர்<br>கூந்தல்யாழ்நரம்புநாற்பேர். | குரல் | பயிர்க்கதிர் - இறகு - பெண்<br>மயிர் - யாழிேனார்நரம்பு (ச) |
| 182—கஅஉ. | | கக. |
| தோரைநெல்விகற்பமூங்கி<br>லரிசிகைவரைசொன்மூப்பேர், | தோரை | ஓர்வகைநெல் - மூங்கிலரிசி -<br>கையிறை (ந) |
| ஆரையேமதில்புற்பாயாம் | ஆரை | மதில் - புற்பாய் (உ) |
| அகலுளேபரப்பூர்நாடே | அகலுள் | அகலம் - ஊர் - நாடு (ந) |
| ஓரையேமாதர்கூடி<br>விளையாடலுடனிராசி | ஓரை | மகளிர்விளையாட்டு - இராசிப்<br>பொது (உ) |
| தாரைகண்மழைநேரோட<br>ரைகைவழியேகூர்மை. | தாரை | கண் - மழை - நேரோடல் - நட்<br>சத்திரம - வழி - கூர்மை (சு) |
| 183—கஅந. | | உ0. |
| ஊர்திதேர்விமானம்பண்டி<br>லும்பலேசிவிகைபாய்மா, | ஊர்தி | தேர் - விமானம் - பண்டி -<br>யானை-தண்டிகை-குதிரை (சு) |
| ஆர்வமேநரகமன்பாம் | ஆர்வம் | நரகம் - அன்பு (உ) |
| அகலமார்பொடுவிசாலம், | அகலம் | மார்பு - விரிவு (உ) |
| ஆர்வலர்கொண்கரன்பர் | ஆர்வலர் | தலைவர் - அன்புடையோர் (உ) |
| அணுவென்பதுயிர்நுண்மைப்பே [ர் | அணு | சீவன் - நுட்பம் (உ) |
| ஆர்தலேநிறைதலுண்டல் | ஆர்தல் | நிறைதல் - புசித்தல் (உ) |
| அகளந்தான்மிடாகற்றாழி. | அகளம் | மிடா - சாடி (உ) |
| 184—கஅச. | | உக. |
| பாரமேகவசந்தோணி<br>பல்லணம்பொறையினோடு,<br>நீருறுகரைவன்பார [ர்,<br>நிறைதரைநிகழ்த்துமெண்பே | பாரம் | கவசம் - தோணி - குதிரைச் சே<br>ணம் - பொறுமை-நீர்க்கரை -<br>கனம் - ஒன்நிறை - பூமி (அ) |
| சூரனேயிரவிதீநாய் | சூரன் | சூரியன் - நெருப்பு - நாய் (ந) |
| துகளென்பகுற்றந்தூளாம், | துகள் | குற்றம் - புழுதி (உ) |
| சாரங்கமானும்வண்டுஞ்<br>சாதகப்புள்ளுமாமே. | சாரங்கம் | மான் - வண்டு - சாதகப்பட்சி(ந) |
| 185—கஅரு. | | உஉ. |
| ஆரல்கார்த்திகைநாள்செவ்வா<br>யரணுறுப்பொருமீனாற்பேர், | ஆரல் | கார்த்திகைநட்சத்திரம் - அங்கார<br>கன் - மதில் - ஆரான்மீன் (ச) |
| சாரலேமருதயாழி<br>னிசையொடுசைலப்பக்கம், | சாரல் | மருதயாழினோிசை - மலைப்<br>பக்கம் (உ) |

| | | |
|---|---|---|
| மூரலேநகைபல்சோறும் | மூரல் | நகைப்பு - பல் - சோறு (௩) |
| முரம்பென்பமேடுபாறை, | முரம்பு | மேடு - பாறை (௨) |
| கூரல்புட்சிறகுமாத | கூரல் | பறவையினிறகு - பெண்மயிர் (௨) |
| ரோதியுமிருபேர்கூறும். | | |
| 186—கஅசு. | | உ௩. |
| சாரிகைபூவைசுங்கஞ் | சாரிகை | நாகணவாய்ப்புள் - சுங்கம் - |
| சுழல்காற்றுந்தானுமாகும், | | சுழல்காற்று (௩) |
| காரிகையழகுபெண்ணே | காரிகை | அழகு-பெண் - கட்டளைக்கலித்து |
| கலித்துறையோர்நூற்கும்பேர், | | றை - ஓர் யாப்பிலக்கணநூல் |
| வாரணங்கவசங்கோழி | வாரணம் | கவசம் - கோழி - தடுத்தல் - |
| தடைசங்குவாரிகைம்மா, | | சங்கு - கடல்-யானை (சு) |
| பூருவமுதுமைமுன்பு | பூருவம் | பழமை - முன்பு - கீழ்த் |
| கிழக்கென்றும்புகலலாமே. | | திசை (௩) |
| 187—கஅஎ. | | உச. |
| ஏரழகுழுபெற்றப்பேர் | ஏர் | அழகு - உழுமாடு (௨) |
| இராசிதாஞ்ஞரைகூட்டம், | இராசி | இராசிப்பொது - கூட்டம் (௨) |
| பாருலகந்தேர்ப்பாராம் | பார் | பூமி - தேரின்பரப்பு (௨) |
| பயல்பள்ளம்பாதிசிற்றுள், | பயல் | பள்ளம் - பாதி - சிறுபையன் (௩) |
| போரமர்சதயத்தோடு | போர் | யுத்தம் - சதயநட்சத்திரம் - |
| புகலுநென்முதலாஞ்சும்மை, | | நென்முதலியசும்மை (௩) |
| பீருவேபயச்சமுற்றோன் | பீரு | பயமுற்றோன் - புருவம் (௨) |
| பெயரொடுபுருவமாமே. | | |
| 188—கஅஅ. | | உரு |
| அருப்பமாரிடரோய்காடா | அருப்பம் | வழுக்குநிலம்-வியாதி - காடு- |
| மரணுடனூருமப்பேர், | | கோட்டை-மருதநிலத்தூர் (ரு) |
| மரக்காலாயிலியஞ்சோதி | மரக்கால் | ஆயிலியநட்சத்திரம் - சோதிநட் |
| மாயவனுடன்முப்பேர், | | சத்திரம் - திருமால்கூத்து (௩) |
| நிரப்பென்பமிடிநிறைப்பேர் | நிரப்பு | தரித்திரம் - நிரப்புதல் (௨) |
| நிறையழியாமைநீர்ச்சால், | நிறை | அழிவின்மை - நீர்ச்சால் (௨) |
| துருக்கமேயரண்கத்தூரி | துருக்கம் | மலைமேற்கோட்டை - கத்தூரி |
| குங்குமமரமுஞ்சொல்லும். | | மிருகம் - குங்குமமரம் (௩) |
| 189—கஅகூ. | | உசு. |
| குருதியேசிவப்பிரத்தங் | குருதி | சிவப்பு - உதிரம் - செவ்வாய் (௩) |
| குசனெனக்கூறுமுப்பேர், | | |
| பரிதியேயூர்கோள்வட்டம் | பரிதி | சூரிய சந்திரரைச் சூழத் தோன் |
| பாற்கரனேமிநாற்பேர், | | றும் வட்டம்-வட்டவடிவு - |
| | | சூரியன் - சக்கராயுதம் (ச) |
| சுருதியேயொலிவேதப்பேர் | சுருதி | சத்தம் - வேதம் (௨) |
| சுரமருநெறிகான்மார்க்கம், | சுரம் | அரியவழி - காடு - வழி (௩) |
| இரதிபித்தளைபெண்யானை | இரதி | பித்தளை - பெண்யானை - இர |
| மதன்றேவியிச்சைநாற்பேர். | | திதேவி - ஆசை (ச) |
| 190—ககூ0. | | உஎ. |
| புரைகுற்றமுவமையில்லம் | புரை | குற்றம் - ஒப்பு - வீடு - உட் |
| புழையுயர்ச்சியுமைம்பேரே, | | டொளை - உயரம் (ரு) |
| விரைமணஞ்சாந்துதூபம் | விரை | வாசனை - கலவைச்சாந்து - |
| | | நறும்புகை (௩) |

| | | |
|---|---|---|
| வீரைதான்றுயரம்வாரி, | வீரை | துன்பம் - கடல் (௨) |
| நரைவெள்ளையிவுளிவெண்மை நந்திநற்சவரிநாரை, | நரை | வெள்ளைக்குதிரை - வெண்மை - இடபம் - சாமரம் - நாரை (௫) |
| சுரைகள்ளான்முலைதொளைப்பேர் | சுரை | கள் - பசுவின்முலை - உட்டொளை () |
| துளும்பலேதிமிறறுள்ளல். | துளும்பல் | திமிறல் - துள்ளல் (௨) |
| 191—௧௯௧. | | ௨௮. |
| மருளென்பகுறிஞ்சியாழின் றிறத்தொடுமயக்கமும்பேர், | மருள் | குறிஞ்சியாழ்த்திறம் - மயக்கம் (௨) |
| இருளொடுநரகமைய லிருளொடுகருமையென்ப, | இருள் | ஒருவகைநரகம் - மயக்கம் - இருட்டு - கறுப்பு (௪) |
| பொருநர்போர்த்தலைவர்கூத்தர் புரவலர்பாணர்வீரர், | பொருநர் | படைத்தலைவர் - நாடகர் - அரசர் - புகழ்ந்துபாடுவோர் - படைவீரர் (௫) |
| இருபிறப்பெயிறும்பார்ப்பு மிந்துவும்புள்ளுமாமே. | இருபிறப்பு | பல் - பிராமணர் - சந்திரன் - பறவை (௪) |
| 192—௧௯௨. | | ௨௯. |
| மருதமேயொருமரஞ்செய் மருதநன்னிலைப்பாடற்பேர், | மருதம் | ஓர்மரம் - வயல் - மருதநிலத்திராகம் (௩) |
| எருவையேகொறுக்கைகோரை கழுகுசெம்பிரத்தமென்ப, | எருவை | கொறுக்கை - கோரை - கழுகு - செம்பு - இரத்தம் (௫) |
| தருமராசன்றன்புத்தன் சண்டனேருருகன்றனும், | தருமராசன் | புத்தன் - இயமன் - அருகன் (௩) |
| கரியென்பதிருந்தைசான்று கறையடிசெகுநாற்பேர். | கரி | கரி - சாட்சி - யானை - மரவயிரம் (௪) |
| 193—௧௯௩. | | ௩0. |
| கருவிபல்லியந்துணைக்கா ரணங்கள்யாழ்கவசமீட்டம், பொருபடைக்கலந்தொடர்ச்சி புயல்பலவினைப்பேர்கூட்டம், பரியின்பல்லணமேயாடை கசைபதின்முப்பேர்பன்னும் | கருவி | வாச்சியம் - உபகரணங்கள் - வீணை - கவசம் - ஈட்டம் - ஆயுதம் - தொடர்பு - மேகம் - பலவினைப்பேர் - கூட்டம் - குதிரைச் சேணம் - வஸ்திரம் - குதிரைச்சம்மட்டி (௧௩) |
| சுரிகையேகவசம்வாளாம் | சுரிகை | கவசம் - உடைவாள் (௨) |
| துவைபிண்ணாக்கிறைச்சியோசை | துவை | பிண்ணாக்கு - தசை - சத்தம் (௩) |
| 194—௧௯௪. | | ௩௧. |
| குருகுபுள்ளிளமைநாரை கொல்லுலைமூக்குக்கோழி, சரிவெள்ளைமூலநாள்வா சந்தியொன்பான்பேர்சாற்றும் | குருகு | பறவைப் பொது - இளமை - நாரைப்பட்சி - கொல்லனுலைமூக்கு - கோழி - கைவளை - வெண்மை - மூலநட்சத்திரம் - குருக்கத்திக்கொடி (௯) |
| முரசேயுத்திரட்டாதிப்பேர் பறையென்றுமொழியலாமே, | முரசு | உத்திரட்டாதி நட்சத்திரம் - வாச்சியப்பொது (௨) |
| தாளமேயுருட்சிமுத்தாம் | தாளம் | உருண்டவடிவு - முத்து (௨) |
| சார்வென்பதிடமும்பற்றும். | சார்வு | இடம் - பற்றுதல் (௨) |
| 195—௧௯௫. | | ௩௨. |
| முரண்வலிபகையாமென்ப | முரண் | வலிமை - பகை (௨) |
| மொய்ம்புதோள்வலியுமாகும், | மொய்ம்பு | புயம் - வலிமை (௨) |

| | | |
|---|---|---|
| உரையென்பகிளவிதேய்வாம் | உரை | சொல் - தேய்தல் (உ) |
| உவாத்தந்தியிளையோன்பௌவம் | உவா | யானை-இளையோன் - பூரணை (௩) |
| ஒரலொலிவிரைவுமாகும் | ஓரல் | சத்தம் - சீக்கிரம் (உ) |
| நிதியிருநிதிபொன்னென்ப, | நிதி | இருவகைநிதி - பொன் (உ) |
| உருநிறம்வடிவட்டைப்பேர் | உரு | நிறம் - வடிவு-அட்டை (௩) |
| ஓதனஞ்சோறேயுண்டி. | ஓதனம் | சோறு - உணவு (உ) |
| 196—௧௯௬. | | ௩௩. |
| அரிகிளிபுணரிமாறே | அரி | கிளி - கடல் - திருமால் - இரதம்- |
| ரைம்மையிந்திரன்கால்காந்தி, | | அச்சவடிவு - தேவேந் திரன் - |
| பரிபுகர்பன்றிசிங்கம் | | காற்று - ஒளி - குதிரை - குற் |
| பகைபுகைபாயல்சோலை, | | றம் - பன்றி - சிங்கம் - பகை- |
| வரிமதிசேகுதேரை | | புகை - பாயல் - சோலை - வரி- |
| வானரமியமன்மூங்கில் | | சந்திரன் - மரவயிரம் - தவளை- |
| எரிபுரைநிறம்பொன்பாந்த | | குரங்கு - இயமன் - மூங்கில் - |
| ளிரவிகண்வரிதார்பச்சை | | நெருப்பு - உட்டுளை - நிறம் - |
| | | பொன்-பாம்பு - சூரியன்-கண் |
| | | வரி-பூமாலை - பச்சை, |
| 197—௧௯௭. | | ௩௪. |
| அரிசிநெற்கதிர்கள்கூர்மை | | அரிசி-நெற்கதிர் - கள் - கூர்மை - |
| யளிபடைக்கலமேயீர்வாள், | | வண்டு - ஆயுதம் - இரம்பம் - |
| அரிதலேசயனநேமி | | அரிதல் - சயனம் - சக்கராயுத |
| யடல்விசிபறையரித்தல், | | ம் - வலிமை - விசிப்பலகை - |
| பரிபுரமதனுட்பெய்த | | வாச்சியம் - அரித்தல் - சிலம் |
| பரலோடிவ்வாறேழைந்தாம், | | பினுட் பருக்கைக்கல் (௧௭) |
| அரிதமேபசுமைதிக்காம் | அரிதம் | பசியநிறம் - திசை (உ) |
| ஆர்ப்பொலிசிரித்தற்பேரே. | ஆர்ப்பு | சத்தம் - நகைப்பு (உ) |
| 198—௧௯௮. | | ௩௫. |
| அருவியேமலைச்சார்வாறு | அருவி | மலைச்சாரலாறு - திணைத்தாள் (உ) |
| மரிதினைத்தாளுமாகும், | | |
| அரலையேகனிவித்தாழி | அரலை | பழம் - விதை - கடல் - மா |
| மரல்கழலையுமாமென்ப, | | ல் - கழலைக்கட்டி (௫) |
| கரடமேமதம்பாய்கின்ற | கரடம் | மதம்பாய்கவுள் - காக்கை (உ) |
| சுவட்டொடுகாக்கையாகும், | | |
| சுரியறான்பெண்மயிர்க்கே | சுரியல் | பெண்மயிர் - ஆண்மயிர் (உ) |
| சொல்லுமாண்மயிர்க்கும்பே | | |
| ராம். | | |
| 199—௧௯௯. | | ௩௬. |
| திருவென்பகமலைசெல்வஞ் | திரு | திருமகள் - செல்வம் - சிறப்பு (௩) |
| சிறப்பொடுமுப்பேர்செப்பும், | | |
| பரிவென்பதுன்பமின்பம் | பரிவு | துன்பம் - சுகம் - அன்பு (௩) |
| பகருமன்பிற்குமப்பேர், | | |
| கரையேநீர்க்கரைசேர்வாகும் | கரை | நீர்க்கரை - சேர்வு (உ) |
| கைத்துநீணிதிவெறுப்பாம், | கைத்து | பொன் - வெறுப்பு (உ) |
| சுரகுருமகவான்றேவ | சுரகுரு | இந்திரன் - பிரகற்பதி (உ) |
| மந்திரியிருபேர்சொல்லும், | | |

| | | | |
|---|---|---|---|
| 200—௨௦௦. | | ௩௭. | |
| அரற்றலேயழுகையோசை | அரற்றல் | அழுதல் - சத்தம் | (௨) |
| ஐதென்பவிரைவுநொய்தாம், | ஐது | சீக்கிரம் - நுண்மை | (௨) |
| இரத்தஞ்செந்நீர்சிவப்பாம் | இரத்தம் | உதிரம் - சிவப்பு | (௨) |
| இலாங்கலியலங்தென்காந்தள், | இலாங்கலி | கலப்பை - தென்னமரம் - செங்காந்தள் | (௩) |
| அரக்கென்பமெழுகுகள்ளின் விகற்பமுஞ்சிவப்புமாகும், | அரக்கு | மெழுகு - கள்ளின்விகற்பம் - சிவப்பு | (௩) |
| அருச்சுனமருதுவெண்மை | அருச்சுனம் | மருதமரம் - வெளுப்பு | (௨) |
| அறிக்கைதானறிவுபற்றும். | அறிக்கை | அறிவு - பற்று | (௨) |
| 201—௨௦௧. | | ௩௮. | |
| அரந்தையென்பதுகுறிஞ்சி யாழிசைதுன்பமாகும், | அரந்தை | குறிஞ்சியாழிசை - வருத்தம் | (௨) |
| அருந்தலேயருமையுண்டல் | அருந்தல் | அருமை - உண்டல் | (௨) |
| அளித்தலுங்கொடுத்தல்காத்தல், | அளித்தல் | கொடுத்தல் - காத்தல் | (௨) |
| அரங்கமாற்றிடைக்குறைப்பே ராடிடஞ்சவையுமப்பேர், | அரங்கம் | ஆற்றிடைக்குறை - நாடகசாலை - சவை | (௩) |
| அரங்குபோரிடம்வட்டாடு மிடஞ்சவைமனைவிகற்பாம். | அரங்கு | போர்க்களம் - சூதாடற்கு வகுத்தவறை - சபை - மனைவிகற்பம் | (௪) |
| 202—௨௦௨. | | ௩௯. | |
| முருந்தென்பமயிலின்றோகை முதன்முள்ளுந்தவளமாகும், | முருந்து | மயிலிறகினடியிற்குருத்து - வெண்மை | (௨) |
| விருந்தமேகிளையின்கூட்டம் [ம் விலங்கின்கூட்டமுமென்றுகு | விருந்தம் | சுற்றத்தின்கூட்டம் - மிருகத்தின்கூட்டம் | (௨) |
| குரங்குவானரம்விலங்கின் பொதுமிகுகோணலாகும், | குரங்கு | குரங்கு - மிருகத்தின்பொது - வளைவு | (௩) |
| எருந்திரல்கிளிஞ்சிலென்பர் | எருந்து | உரல் - கிளிஞ்சில் | (௨) |
| இடஞ்செல்வம்விசாலம்வாமம். | இடம் | ஐச்சுவரியம் - அகலம் - இடப்பக்கம் | (௩) |
| 203—௨௦௩. | | ௪௦. | |
| ஆரியர்மிலேச்சர்நல்லோர் | ஆரியர் | மிலேச்சர் - நல்லோர் | (௨) |
| ஆனென்பதிடைச்சொலாவாம், | ஆன் | இடைச்சொல் - பசு | (௨) |
| ஆரியேகதவுசோழ னழகொடு மேன்மைக்கும்பேர் | ஆரி | கதவு - சோழன் - அழகு - மேன்மை | (௪) |
| காருகர்தந்துவாயர் கடுங்கொலையாளர்வண்ணர், | காருகர் | நெய்வோர் - கொலையாளர் - வண்ணர் | (௩) |
| தாருகாரியென்பகாளி சண்முகன்றானுமாமே. | தாருகாரி | காளி - முருகக்கடவுள் | (௨) |
| 204—௨௦௪. | | ௪௧. | |
| சார்கூடலொருதாருப்பேர் | சார் | கூடுதல் - ஓர்மரம் | (௨) |
| சான்றோன்மான்றலைநாள்பானு, | சான்றோன் | மிருகசீரிடநட்சத்திரம் - சூரியன் | (௨) |
| வேரென்பமரவேர்வேர்வாம் | வேர் | மரவேர் - வேர்வை | (௨) |
| விழைச்சுநல்லிளமைபோகம், | விழைச்சு | கட்டிளமை - புணர்ச்சி | (௨) |

| | | |
|---|---|---|
| பாராவாரந்தான்வாரி கடற்கரையிருபேர்பன்னும், | பாராவாரம் | கடல் - கடற்கரை (உ) |
| சாரணரென்பவொற்றர் சமண்முனிவர்க்கும்பேராம். | சாரணர் | வேவுகாரர் - சமணவிருடிகள் (உ) |
| 205—உ0ரு. | | சஉ. |
| அராகஞ்செந்நிறமேபாலை யாழ்முடுகியற்பாட்டாசை, | அராகம் | சிவந்தநிறம்-பாலையாழ்-முடுகியல்-இசைப்பாட்டு-ஆசை (ரு) |
| கரேணுவேபிடியானைக்குங் கடுங்கொலையானைக்கும்பேர், | கரேணு | பெண்யானை - யானை (உ) |
| கிராணமேகிரகணமூக்காய் கிளர்சிறுவட்டிலும்பேர், | கிராணம் | கிரகணம் - மூக்கு - சிறுவட்டில் (ங) |
| கரீரமேமிடாவகத்தி கரியின்பல்லடிமுளைப்பேர். | கரீரம் | மிடா - அகத்திமரம் - யானைப்பல்லடி - முளை (ச) |

ரகரவெதுகை முற்றிற்று.

## க௩ - வது. லகரவெதுகை.

| | | |
|---|---|---|
| 206—உ0சு. | | க. |
| புலவர்பாடுநரேகூத்தர் புதனும்பர்கவிஞர்கம்மாளர், | புலவர் | பாடுவோர் - கூத்தர் - புதன் - தேவர்-கவிஞர்-கம்மாளர் (சு) |
| வலவனேவெற்றியாளன் மருவுந்தேர்ப்பாகன்மாயோன், | வலவன் | வெற்றியாளன் - தேர்ப்பாகன் - திருமால் (ங) |
| அலகுநெற்கதிரேயாதி பலகறைநாளம்பெண்ணேதி, | அலகு | நெற்கதிர்முதலியன - பலகறை - நிலப்பூச்சி-இலக்கம்-ஆயுதம் () |
| அலரிகண்வரியருக்க னழகொருமரம்பூவாமே. | அலரி | கண்வரி - சூரியன் - அழகு - ஓர்மரம் - பூப்பொது (ரு) |
| 207—உ0எ. | | உ. |
| ஆலமேவடவிருக்க மடுநஞ்சோடலர்பூநீராம், | ஆலம் | ஆலமரம் - விடம் - மலர்ந்த பூ - நீர் (ச) |
| மூலம்வேர்முதலேயேது முதிர்வுதுகிழங்கோர்நாளாம், | மூலம் | வேர் - முதல் - காரணம் - கிழங்கு - ஓர்நட்சத்திரம் (ரு) |
| சீலமேகுணந்தண்டித்த றிகழ்சரித்திரமுப்பேரே, | சீலம் | குணம் - தண்டித்தல் - சரித்திரம் (ங) |
| சாலமேவலைசாலேக மராமரஞ்சவைமதிற்பேர். | சாலம் | வலை - பலகணி - ஆச்சாமரம் - கூட்டம் - மதில் (ரு) |
| 208—உ0அ. | | ங. |
| காலம்வைகறைகாலப்பேர் | காலம் | விடியற்காலம் - பொழுது (உ) |
| கலமலம்யாழ்பூணுவாய், | கலம் | கலப்பை - யாழ் - ஆபரணம் - மரக்கலம் (ச) |
| சாலகங்காலதர்ப்பேர் தானேபூமொட்டுமாகும், | சாலகம் | பலகணி - பூவரும்பு (உ) |
| தாலமுண்கலமேநாவே தராதலம்பனையேநாற்பேர், | தாலம் | உண்கலம் - நா - பூமி - பனைமரம் (ச) |
| ஆலலாடுதலொலிப்பேர் | ஆலல் | ஆடுதல் - சத்தம் (உ) |
| அறுவைசித்திரைநாளாடை. | அறுவை | சித்திரைநட்சத்திரம்-வஸ்திரம்() |

| | | |
|---|---|---|
| 209—உ0கூ. | | ச. |
| இலம்பகமத்தியாய<br>நுதம்சூட்டென்றிருபேராமே, | இலம்பகம் | அத்தியாயம்-நுதலணிமாலை (உ) |
| இலஞ்சிமாவாவிகொப்பூ<br>ழெயில்குணமகிழேயேரி | இலஞ்சி | மாமரம்-குளம்-உந்தி-மதில்-<br>குணம்-மகிழமரம்-ஏரி (எ) |
| பலங்கனிபயன்காய்சேனை<br>பலங்கிழங்குறுபேராகும், | பலம் | பழம் - பயன் - காய் - சேனை<br>வலிமை - கிழங்கு (கூ) |
| அலங்கலென்பதுபூமாலை<br>யசைவொடுதளிரிலங்கல். | அலங்கல் | பூமாலை - அசைதல் - தளிர் -<br>ஒளிசெய்தல் (ச) |
| 210—உகO. | | ரு. |
| ஒலியென்பதிடியேகாற்றே<br>யோசையென்றுரைக்குமுப்பேர், | ஒலி | இடி - காற்று - சத்தம் ங) |
| ஒலியலேயாறுந்தோலு<br>முடித்தவாடையும்பைந்தாரும், | ஒலியல் | நதி - தோல் - வஸ்திரம் -<br>பூமாலை (ச) |
| கலுழியேகான்யாறென்ப<br>கலங்கியநீருமாமே, | கலுழி | காட்டாறு - கலங்கனீர் (உ) |
| கலைமதிப்பங்குதூசு<br>கல்விநூலிரலைகாஞ்சி, | கலை | மதியின்பங்கு-சீலை-வித்தை-<br>நூல்-ஆண்மான்-மேகலை (கூ) |
| 211—உகக. | | கூ. |
| பீலியேயாலவட்டம்<br>பெருவரைகலாபிதோகை, | பீலி | ஆலவட்டம் - மலை - மயில் -<br>மயிற்றோகை (ச) |
| பாலிகையுதடுவட்டம்<br>பட்டவாண்முட்டியும்பேர், | பாலிகை | உதடு - வட்டவடிவு - படை<br>வாளின்முட்டி (ங) |
| வேலியூர்மதில்காவற்பேர் | வேலி | ஊர் - மதில் - காவல் (ங) |
| மெத்தைமெல்லணையேசட்டை, | மெத்தை | அமளி - சட்டை (உ) |
| தோலிடம்வனப்புவார்த்தை<br>துருத்திதோற்பலகையைம்<br>பேர். | தோல் | யானை - எண்வகை வனப்பினு<br>ளொன்று - சொல் - ஊதுந்<br>துருத்தி - தோலாற்செய்த<br>கேடகம் (ரு) |
| 212—உகஉ. | | எ. |
| பாலையோர்மரநிலம்மந்<br>நிலத்தினிற்பாடலும்பேர், | பாலை | ஓர்மரம் - ஓர்நிலம் - அந்நிலப்<br>பாடல் (ங) |
| வேலையேகடலதற்கு<br>மேவியகரையோர்காலம், | வேலை | கடல்-கடற்கரை-நிகழ்காலம் ங) |
| மாலையேயிரவோடந்தி<br>மாலிகையொழுங்குநாற்பேர், | மாலை | இராத்திரி - அந்திப்பொழுது-<br>மாலை - ஒழுங்கு (ச) |
| சாலையேகுதிரைப்பந்தி<br>யறப்புறந்தானுமாமே. | சாலை | குதிரைப் பந்தி - அறத்தின்<br>சாலை (உ) |
| 213—உகங. | | அ. |
| அல்லிவெள்ளாம்பல்காயா<br>வகவிதழாகமுப்பேர், | அல்லி | வெள்ளாம்பல் - காயாமரம்-<br>உள்ளிதழ் (ங) |
| அல்லிராவிருளேயென்ப | அல் | இரவு - இருள் (உ) |
| ஆகமார்புடலுமாமே, | ஆகம் | மார்பு - உடம்பு (உ) |
| சில்லியேவட்டங்கீரை<br>தேருருள்சிள்வீடென்ப, | சில்லி | வட்டம் - சிறுகீரை -<br>தேருருள் - சிள்வண்டு (ச) |

